புராணிகர், கலாநிதி

திரு. இ. சிதம்பரசாமி பாண்டியர்

அவர்கள்

# அன்பளிப்பு

உ

சிவமயம்.

மகாவித்துவானாகிய

வடகோவைச்

# சபாபதிப்பிள்ளையவர்கள்

இயற்றிய

# யேசுமதசங்கற்பநிராகரணம்.

இஃது

கொழும்புத்துறை

தி. குமாரசுவாமிச்செட்டியாரவர்கள்

அநுமதிப்படி

நல்லூர்

சிற் - கைலாசபிள்ளையால்

பதிப்பிக்கப்பட்டது.

—•◦❀◦•—

சென்னபட்டணம்:

சித்திரபானு௵ வைகாசி௴,

1882.

# சிறப்புப்பாயிரம்.

பாரின்மேல்வருபற்பலசமயமும்பகரி
ஞேரோர்காலத்திலுயர்வதுமிழிவதுமுளநற்
சீரிதாயென்றுந்திகழ்வதுசைவசித்தாந்த
மோரினீததனுயர்வினுக்கொருபொருஞ்சான்றால். க

அரசரோடெழுந்தரசரோடிழிவதாகியபுன்
பரிசுபெற்றதுபரன்றருபண்பிலததான்று
நிரயமேபுகுவார்தனநெறிநிலாதவொன்
றுளைசெயுஞ்சிவசமயமீதுறுத்திலதன்றே. உ

உலகம்யாவையுமொருதனிமுதல்வனாயுறுவித்
திலகுமப்பொருளெவ்வெவர்நிலைமைக்குமிணங்க
அலகிலாததன்னருள்புரிந்தமருமோர்பதியிற்
சிலர்களிக்கவோதெய்வமாமறைதருஞ்செகத்தே. ங

ஆதியாயுறுமமலனார்மறையவனியினிற்
பேதமாம்பலபெருகியபின்னரோவவன்றன்
தீதிலாமறைசெப்பிடுங்காலத்திற்செறிந்த
தோதின்மானிடருனாற்றியசமயமென்றுணரோ. ச

அணுவுமீசனருளிலாதசைவுறாதென்றே
துணியுமாரணந்தோற்றியதேவனவன்சொல்லாத்
துணிவிலாதனசமயங்களெனின்முனர்ச்சன்மத்
தணையும்பல்வினைக்கடக்குமன்னவுமவனருளே. ரு

இங்கிதன்றிறமறிகிலாதீசனார்வகுத்த
புங்கவைதிகசைவநன்னெறிகளிப்புவியிற்
றங்குபாரதகண்டத்துங்குடதிசைச்சரிப்போர்
துங்கமேவிடாவநாரியர்துன்னினர்தொலைகஇ. சு

எங்கள்யேசுவின்சமயமேஞானமாநெறிமற்
றுங்கள்வைதிகசைவமஞ்ஞானமென்றுரைத்தே
யங்குவாழ்நருளறிவிலாதவர்க்குமாலேற்றித்
தங்கள்புன்மதத்தழுத்திடவதுகண்டுதெரியான். எ

பரம்பரைச்சிவபத்தன்வைசியகுலதிலகன்
கரும்புகைத்திடக்கவிமழைபொழிதருகவிஞர்
தரம்பொருந்திடாச்சாமிநாதன்றனக்கநுசன்
பரந்தகேள்வியன்றில்லையம்பலத்தகைபாலன். அ

கனகமேநிகர்மேனியின்கவினுயர்காந்தி
தினகரன்றனைப்பழித்திடுசீர்நடேசன்
அனகனம்பலவாணனையன்பொடுதொழுவோன்
பனகமேந்தியபாரினைபகர்வதற்கரியோன். கூ

தமரமாற்றியதவப்பயனெனச்சகத்துதித்த
குமரசாமியென்னுயிர்கொழும்புத்துறைக்குரிசில்
தமிழிறனமரநிந்துயுமாறுசாற்றுகயே
சுமதசங்கற்பநிராகரணஞ்சுவைதுலங்க. ௰

என்னவேந்தனீயிசைச்குமுனின்னநூலொன்று
நன்னயம்பெறவியற்றுவாறுடினன்யானு [த்துக்
முன்னிலுன்னுரைதூண்டுகோல்போன்மெனவுரை
கன்னலிற்சுவைமுதிர்ந்திடுகொழிதமிழ்க்கவியால்.

இன்றுதோன்றியயேசுவின்மதமெவர்தமக்கு
நன்றுதோன்றுசங்கற்பமுநவையினன்னியாய
மொன்றிமேம்படுநிராகரணமுமினிதுரைத்தான்
மன்றமர்ந்திடுதிருவடிக்கன்புறுமனத்தோன். ௧௨

தருக்கசாகரந்தன்னிகரிலாவியாழ்ப்பாணத்
திருச்குலாவியதெரிவைதன்றிருநுதற்றிலகம்
பெருக்கமாம்பலசாத்திரவகைதொகுபேழை
செருக்குறும்பரமதத்தருக்கொருதனிச்சிங்கம். ௧௩

பாசநீக்கத்தினுயிரிடைக்கிளர்பரசிவத்தின்
றேசுடைச்குறியாகியதொருதிருநீறும்
மாசிலாவருட்குறியதாங்கண்டிகைவடமு
மீசனுக்கன்புபெருக்கியவெழில்பெறவணிவோன். ௧௪

பொருவிலாத்திருவாவடுதுறையிலெப்புவியும்
பரவுகைலையம்பரம்பரைதனில்வருகுருவாய்
மருவுசுப்பிரமணியதேசிகன்மருமலர்த்தாள்
விரவுவல்வினைவேரறுத்திடத்தலைமிலைந்தோன். கரு

சுத்தசைவசித்தாந்தநீடுறைக்கடற்படிந்து [லோன்
மெய்த்தவைந்தெழுத்தேபொருளெனக்கொண்டமே
தத்துவத்தியறெரிந்தவன்றமிழ்வடமொழிதேர்
வித்துவான்சபைகளுக்கொருபதியெனமிளிர்வோன்

அவத்தினைப்புரியகப்புறச்சமயமாலகற்றிச்
சிவத்தினைப்புரிதருமொருசித்தாந்தசைவ
மகத்துவத்திருநெறியினைநாடொறும்வளர்க்குந்
தவத்தினைப்பெரிதுடைமையாற்றனாபுகழ்தக்கோன்

இந்துசேகரனடியனாயவனெனவீண்டுப்
புந்திசெய்குணச்சுயம்புவேள்புரிந்தமெய்த்தவத்தால்
அந்தண்மாநிலஞ்சபாபதியதிருனென்றேத்த
வந்துதோன்றியசைவசூளாமணிமாதோ. கஅ

சைவமாகியதாமரைத்தடமொளிதழைப்பப்
பொய்வரும்விலியகயிரவம்பொலிவிழப்ப
மெய்வரும்புலவோரளிகூட்டுணவிவனால் [றே,
தெய்வஞாயிறென்றெழுந்தெனத்திகழ்ந்தனையன்

வேறு.

கற்கரியதமிழொடிங்கிலிஷ்கலைகண்டோர்ந்து
கயிலாயநாதகுருகழற்கால்சேர்ந்து
சிற்குணத்தர்தெரிவருநன்னிலைகடேர்ந்து
சிவசமயசித்தாந்தநெறியேபோந்து
தற்குவமையில்லாதகுமாரசாமி
தனக்கிதயநண்பினனாய்ச்சரிக்குஞ்சிற்றூர்ச்
சற்குணன்வைரவநாதன்றனயன்ஞமோ
தரம்பிள்ளையிப்பதிகஞ்சாற்றினனே.



உ

# சிறப்புப்பாயிரம்.

வானளக்குமுயர்குடுமிச்சிகரவரை
பலதுறுமியருவிவாய்ந்து
கானளகுமலர்ப்புறவக்கானகங்கள்
பலகஞலிக்காமர்சால்பன்
மீனளக்குந்தடமருதப்பழனங்கள்
விராய்நெய்தன்மிக்குச்சேடன்
ஞானளக்கவரியவளம்பலவுடைய
வீழமெனுந்தகைசானாட்டில். க

கங்கைநதிமுடித்தசடைச்சிவபெருமா
ஞானமுகக்கடவுள்சூர
னங்கமிருபிளவ 'டப்பொருதவயிற்
குமரவேளமர்ந்துமேவுந்
துங்கமிருதளிகள்பலவுடைத்தாய்வை
திகசைவர்க்கிடனாய்த்தொன்மைச்
சங்கம்வளர்தமிழ்தனக்கோர்வைப்பாய
யாழ்ப்பாணந்தன்னின்மாதோ. உ

தென்பூத்தமலர்பொதுளித்தேனினங்கள்
கூட்டுண்டுதெவிட்டவாசக்
கொன்பூந்தமதுப்பிலிற்றிக்சோடுகளிற்
குயிலினங்கள்குலவநாளும்
பொன்பூத்தமறுமார்பப்புத்தேள்சேய்க்
[illegible]
மின்பூத்தபாசறையொன்றமைத்ததெனும்
பொழிலுடைத்தாய்விளங்குங்கோவை. ௩

இந்நகரிற்பொறையறிவன்பாசாரம்
வேளாண்மையிழுக்காவாய்மை
துன்னுமுயர்குடிச்சுயம்புநாதனுந்தெய்
வதயானையென்னுந்தூய
நன்னர்மனைத்தையலார்தானுமுளூற்
றியதவத்தோர்குரிசினண்ணி
மன்னுசிவபத்தியொருவடிவாகிச்
சபாபதிப்பேர்மாணப்பூண்டான். ௪

பரந்தபலவிலக்கியமும்பதங்களின்முட்
டறுக்குமொருபண்பான்மிக்க
விரிந்தபலவிலக்கணமும்வியன்பொருண்முட்
டறுக்குமொருமேன்மைசான்ற
இருந்தகைநற்றருக்கமுமெய்யேறுபல
புராணமுந்தோமிரிக்குங்காட்சி
தருந்தகைவேதாந்தமுடன்பிறகலையு
மயங்காமற்றலைகண்டானால். ௫

அருள்கொழிக்கும்புகழ்த்துறைசையமர்ந்தருள்சுப்
பிரமணியவதுலஞானக்
குருவளிக்குமுபதேசவருள்கொடுசை
வாகமநூற்குளித்தஞ்ஞான
விருடுமிக்குமைஞ்செழுத்துமெழினீறுங்
கண்டிகையும்பொருளாக்கொண்டே
கருவழிக்குந்திருவேடமுடையவர்க்கன்
பினுய்வாழ்காலத்தின்கண். ௬

மண்டபங்கள்வானளக்கமாளிகைகள்
மதியளக்கும்வளஞ்சால்கின்ற
தண்டலைசூழ்தருகொழும்புத்துறைவணிகர்
குலத்துதித்துத்தனதன்மாட்சி
கொண்டுகொடைகல்வியறிவாண்மையொடு
சிவபத்திகுலவப்பூண்டே
யெண்டிசையும்பரவுபுகழுடைக்குமர
சாமிவேளென்பான்மன்னோ. ௭

பின்னளிற்பாவகாரியராய்மேற்
றிசையிருந்தபிராந்திமோசே
முன்னனசிதடர்சிலர்தொகுத்தவிவி
லியப்புரட்டைமுன்செய்பாவந்
தன்னலித்தமிழ்நாட்டிலொருசிலர்கொண்
டாடல்கண்டுதரியானாகி
யின்னவிப்புறச்சமயமயலொழித்திங்
கிவர்ப்புரத்தலறனென்றெண்ணி. ௮

பண்டிதர்தம்போரேறேநாவலருண்
மகிழ்பூப்பப்பாடல்சான்ற
தண்டமிழாற்சதுர்வேததாற்பரிய
சங்கிரகமுதனூறந்தோய்
விண்டைமலர்சடைக்கணியுமெம்பெருமாற்
காளல்லாவிழுதைதீரார்
கொண்டிழலும்யேசுமதமறுத்தொருநூ
லியாமஇழக்கூறுயென்ன. ௯

மொழிசுருங்கிப்பொருள்விளங்கிமொழிதொறுமின்
பம்பயந்துமுட்டாநற்சொற்
கழிபுணர்ந்தோசைத்தாகியாழ்ந்துமுறை
பெற்றுலகந்தழுவிக்காசில்
விழுமியநற்பொருள்பயந்துவிளங்குமுதா
ரணங்களுடைத்தாகிமேவக்
கொழிதமிழால்யேசுமதசங்கற்ப
நிராகரணங்கூறினனே. ௧0

இஃதியற்றினர் நூலாசிரியர்மாணாக்கர்

ச. சிவப்பிரகாசபிள்ளை.



கணபதி துணை.

# யேசுமதசங்கற்பநிராகரணம்.

## தற்சிறப்புப்பாயிரம்.

ஈசனைமுற்றறிவாதியெண்குணத்தெம்
　　பெருமானையிறைஞ்சிமாற
நேசமோருதிருவுருக்கொண்டெமையாண்ட
　　குருமணியைநிறுவிப்புந்தி
ஆசுபுரிபுறப்புறந்துட்சிலதழீஇ
　　யவைக்கயலாவறிவிலார்சே
ர்யேசுமதசங்கற்பநிராகரண
　　மூலகறியவிசைப்பாமீண்டே.

## நூல்வரலாறு.

திருவிளங்குவேதாகமச்செம்பொருடெளித்துக்
கருவிளங்குபல்லுயிர்க்குநற்கதியினைக்காட்டிப்
பொருள்விளங்குசித்தாந்தமெஞ்ஞான்றுமிப்புவியி
லருள்விளங்குமேற்சமயமாயரசுவீற்றிருக்கும். ௧

நாலுவேதமுமாகமங்களுந்தலைநணிய
மேலைநுண்பொருளானசித்தாந்தமோர்விதியில்
பாலினேர்முனர்மதித்துயப்பருப்பொருளாகத்
தூலருக்குமநியாயத்திற்றெருத்தனபலவால். ௨

அப்பருப்பொருட்கடலுளொவ்வொன்றினையறியா
தப்பினுண்பொருளெனக்கொடுசமுத்திரகலச [ர்
மொப்பவேறுவேறளவைகளோர்ந்தனர்கூட்டி
யிப்புவிக்கண்வெவ்வேறுபல்சமயநூலியாத்தார். ௩

யாத்துவிட்டனயாவுஞ்சித்தாந்தத்திலெய்தக்
கோத்துவைத்தசோபானமாய்க்குலவுமவைதா
நாத்துதித்திடவரும்பொருட்பலாபலநயத்தாற்
பாத்திடப்படுமகம்புறமெனவிருபகுப்பா. ௪

அகமிரண்டுபட்டிடுமகமகப்புறமென்னத்
தகவிலப்புறம்புறம்புறப்புறமெனச்சாரு
மிகுமந்நான்குமொவ்வொன்றறுவகைபெறுமேலு
மிகலியொவ்வொருவகையினின்றெழுந்தவெண்ணில
[வே

பரதகண்டத்ில்வழங்குவபகுதிகொள்யாவும்
விரதசீலமில்லவர்களாய்நாற்றிசைமேவிப்
பரவிடும்புவியுறைதருமாந்தர்கள்பலரும்
வரமிலப்புறப்புறச்சமயத்தராய்வாழ்வார். ௫

நிகழுமிக்கலியுகத்துமேற்றிசைதொறுநீடித்
தொகுமகாரியரொருசிலர்சொல்லுகாற்பௌத்தந்
தகுதியில்லுலகாயதஞ்சமணமென்றுரைக்கும்
பகுதிகொள்புறப்புறத்தர்நூல்சிற்சிலபாரா. எ
[யாற்ற

அவையியம்பிடுபொருள்களுளொரோவொன்றை
நவையிகந்தவென்றேகொடுநாடினர்சிலகோள்
கவைஇயன்னவைக்கயலதாவொருநெறிகட்டி
விவிலியமீமெனும்பெயரினல்விடுத்தனர்மன்றே. அ

அந்தநூற்பொருள்பழையதுபுதியதென்றமைந்து
வந்திடும்மவையேசுவின்வரனெறிதனையே
புந்திகொண்டுரைத்திடுதலாற்புகலுமம்மதத்தை
யிந்தமாநிலம்யேசுவின்மதமெனவிசைக்கும். கூ

மற்றம்மான்மதமேற்றிசைக்கண்டத்துவாழுங் [ல்
கொற்றவேந்தர்கடுணை பெற்றியெழுந்தவர்கோல்செ
சுற்றெலாம்பரந்திருள்செயூஉத்தோடகலவிளக்கக்
கற்றமாந்தரல்லார்பலர்மனநிலைகடந்தார். க0

அல்லமேற்படுங்கலிவரவறந்தலையெடாவென்
றெல்லைகாண்கிலாவறிவுடையிறைவகுத்திட்டாற்
றொல்லைவைதிகசைவமார்க்கத்தருந்துடக்குற்
றல்லல்கூடினர்கலியுகத்தார்கொலோமயங்கார். கக

புறத்திறலெமர்மயக்கமன்பூண்பதுகலியின்
றிறத்திறலலதில்லைசித்தாந்தநூறெளிந்தோர்
மறுத்திடார்புறத்தவர்மொழிவைதிகசைவ
நிறுத்திடார்வறிதிருப்பரேல்விழுவர்வெந்நிரயம், ௧௨

என்றுமாமறைமொழிந்தகட்டுரையினையெண்ணி
மன்றவாணனுக்கடியராம்வைதிகசைவர்
நன்றிலாரின்முற்பொலிந்தெழுவிவிலியாடிப்பா
லொன்றுறார்மயலரன்பணிதலைநின்றிங்குய்ய. ௧௩

பேசுமப்புதுவிவிலியத்துளகதைப்பிணக்கைப்
பேசலிற்பலர்விடுத்தனமதத்தையேபிண்டித்
தேசனைத்துமன்புலப்படாயச்சுடரேற்றி
யேசுவின்மதமறுப்பினையியற்றுவானிசைந்தேம்௧௪

உ

பரமபதிதுணை.

# யேசுமதசங்கற்பநிராகரணம்.

முதலாவது

## யேசுவாதிசங்கற்பம்.



எங்குநிறைதருமருவம்பெருவலிபே
ரருளுடைமையிவற்றினோடு
பங்கமின்முறறறிவுசுதந்திரம்பூர்த்தி
சமமின்மைபலவும்பூண்டு
துங்கமுடைபிதாச்சுதன்சுத்தாவியெனத்
திரிவிதத்திற்றுலங்கியேகந்
தங்கியொருதூநிலையிற்சத்துக்க
டொழவிருப்பான்றலைவனன்றே. ௧

அப்பரன்றன்மகிமையுணர்ந்திறைஞ்சவுயிர்
வருக்கத்தையளிப்பான்வேணடி
யிப்பெரியவான்பூமியிரண்டினையு
மிவற்றின்சணிலங்காநிற்குந்
தப்பில்சரமசரமாம்பொருட்டொகுதி
தனையுமுறைசாரவைந்து
செப்புதினந்தமினெணிச்சொல்லாற்றலிற்சூ
ளியதத்தினனிசிருட்டித்தாருள். ௨

அங்கதற்பின்னாணமானவனைத்
தன்றனைப்போலாக்கவென்னூஉத்
துங்கமுறுமோருருவைமண்ணிற்
சமைத்துயிர்ப்புத்தோன்றவந்தப்
பங்கமிலாவுருவத்திற்பயின்றசித்
துளையிலுயிர்ப்பவனந்தன்னைப்
பொங்கிநிறைதரப்பரன்மன்னூதிடமற்
றதுமகனாய்ப்பொலிந்ததன்றே. ௬

அருளுடையபரன்மகனுக்கருந்துணையா
வொருமகளையளிப்பான்வேண்டி
மருளுறுமோர் துயிலவற்குவருவிக்க
வவனனிகண்வளர்ந்தானாகப்
பொருளெனவோரொன்புதனையவன்புடையின்
வாங்கியதிற்பொருவேனட்டத்
திருளகக்களபமுலைமாதொருத்தி
தனைத்தோற்றியீந்தானன்றே. ௭

இம்முறையால்வானாதியெப்பொருளு
மான்மாவுமிருமூன்றுள்ளே
செம்மைபெறச்சிருட்டித்தேழெனும்வைக
லெப்பொருளுஞ்செய்யானாகி
யெம்மிறையாளாவிருந்தவ்வேழாநா
ளினைச்சுத்தமெய்யதச்செய்தா
னம்முறையாலதுசுத்தமாய்யிறைக்
குரியதினமாயிற்றம்மா. ௮

மற்றவற்கோருறைவிடமாவேதேனென்
றொருதோட்டமாணவாக்கிச்
சொற்றவதனடுவினிற்சீவத்தாரு
வுடனன்மைதீமைதோற்றும்
பெற்றிமரமதனையும்பின்றோற்றுவித்து
மானவனைப்பெட்பினுண்டே
யுற்றுறையநிறுவியவற்கொருவார்த்தை
பரனருளாலுரைப்பான்மன்றோ. ௬

மானவகேண்மோவிந்தவையகத்திற்
சரமசரமானவெல்லா
நீநயத்தொடாளுதிமன்னிகரிலா
வித்தோட்டநடுவணுமித்
தானமுறுநலந்தீங்குதனிதெரிக்கு
மரங்கொள்கனிதவிர்தியுண்ண
னுநவின்றவிதிகடந்துமற்றதனை
யுண்ணிலுடனசிவைதிண்ணம். ௭

என்றுரைத்துப்போயினன்மானவன்றன்
மனைவியோடிருந்தானுண்டே
யொன்றுசூழுறவுடையபேய்கடவுட்
கிகல்விளைக்கவுளத்திலெண்ணி
நன்றளித்தசீவகோடிசடம்முட்
சருப்பத்திற்சரந்துநண்ணூஉ
வென்றிவடிவேல்விழியீவிளையடைந்து
முன்னின்றுவிளம்புமொன்றே. ௮

பன்னமருந்தேமொழியாய்தோட்டத்தி
னுள்ளவெலாம்பரிவினீவி
ருன்னலாகாதென்றேயுங்கடவு
ளுரைத்தது மற்றுண்மையோவென்
றெண்ணுறுசூழுறவினுடன்வினவியதா
லதுகேட்டவீவென்றோதும்
பெண்ணரசிமற்றதன்சூதுரையறியா
ளிறையுண்மைபேசலுற்றாள். ௯

சருப்பநீகேண்மதியித்தோட்டத்தி
னடுவணோர்தாருவுண்டா
லருப்பமோடுண்பவர்க்குநலந்தீங்கு
தனிதெரிக்குமதன்பான்மேவும்
பருப்பழங்கள்பறித்துண்ணலஃதொழிந்த
மரப்பழங்கள்பரிவினுண்மின்
விருப்பின்விதிகடந்துண்ணின்மரிப்பிரென
வுரைத்தனனெம்மேலோனென்றாள். ௧௦

அவ்வுரைகேட்டுளோர்சருப்பமவண்மருள
வத்தருவின்கனியைநீவிர்
செவ்விகனிதின்பிரேனும்மகக்கண்
டிறந்துநன்மைதீமைதேர்வி
ரிவ்வுலகிற்றனக்குநிகராவிரென
வறிந்துங்கோனிங்ஙன்சொற்றான்
மைவிழியாயென்றதுமற்றதுபறித்துண்
டீந்திட்டாண்மணவாளற்கும். ௧௧

ஆதாமென்பேர்பெறுமம்மானவனு
மர்கனியையன்பின்வாங்கித்
தீதாமென்றறியாமேதிருத்திபெற
நன்றிதின்றான்றேவனுண்டுப்
போதாவாதாமேநீயெங்குற்றா
யிவணெம்முற்போதியென்னக்
கோதாமுன்போதரினானிருவாணி
யாயிருந்தேன்கோவேயென்றான். ௧உ

நிருவாணிநீயெனநிற்குணர்த்தினோ
ரேவராதுநிற்கநீந்த
தருமேவுங்கனிபறித்துத்தின்றனைகொல்
லோவுண்மைசாற்றுகென்றே
பெருமானங்கேவினவப்பெருமானே
நீபுணர்த்தவேய்த்தோளுண்க
ணொருமாதம்மரக்கனியைப்பறித்தளிக்க
வேற்றுண்டேனொருவேனென்றான். ௧௩

பேதைநல்லாயெம்விதியைமதியாமே
நீயிதனைப்பெட்டுச்செய்தற்
கேதுதானென்னையெனவிறைவினவ
வதுகேட்டவீவென்மாது
மாதியேசருப்பமெனைவஞ்சித்துன்
விதிகடப்பித்ததுவென்பாலிற்
றீதிலையென்றுரைத்திட்டாடேவனத
னைச்சபித்தானுரகமாக. ௧௪

சாபத்திற்கிலக்காயசருப்பத்துட்
பேய்க்கிறைவன்சாற்றும்பின்னும்
பாபத்தைப்புரிந்தவிவள்சந்ததிக்கு
முனக்குமுறுபகையைச் செய்வே
மாபத்தச்சந்ததியாலுனக்கெய்து
மென்றதன்மேலணங்கைநோக்கிக்
கோபத்தாற்சில்லுரைகளவள்வருந்துந்
திறனடிக்கூறலுற்றான். ௧௫

மாதராய்சூலினனிவருத்துவமுன்
றனைநீதான்வருத்தத்தோடே
காதன்மகப்பயந்திடுககணவன்கீழ்ப்
பட்டடங்கிவாழ்கவன்மு
றுதனையுனையாள்கவெனவுரைத்தா
டவன்முகத்தைநோக்கிநம்பீ
தீதிழைத்தாய்பெண்வழிச்சென்றதலினீ
ணிலனினக்குச்சீரின்றாக. ௧௬

மண்ணினுருவாகியநீமண்ணாக
வழிந்துமண்ணாய்மாறுங்காறு
முண்ணுகமெய்வருத்தத்தோடூண்பலவு
மெனச்சாபமுரைத்துப்பின்னர்ப்
புண்ணியபாவந்தெரிந்துமானவனெம்
பொருவுற்றான்சீவத்தாரு
நண்ணியதன்பழனருந்தினித்தியனு
மாவனெனநாடிக்கோமான். ௧௭

தோட்டத்தினின்றுமவற்றுரந்துபுறம்
போக்கியதனவனெங்கும்
கோட்டக்கசிவமரந்தனைக்குறுகு
நெறிதன்னைக்குறிக்கொண்டோம்பக்
கூட்டத்தவுருக்களைமன்னழலுமிழுங்
கொள்கைவலகொடியவைவா
ளீட்டத்தினொடுமெந்தத்தோட்டத்தி
னதன்சூழலிருத்தினனால். ௧௮

மானவன்பின்புறம்போந்துமனைக்கிழத்தி
தனைமணந்துமகார்கடம்மை
யீனமுடன்றோற்றுவித்தானிவர்வழியே
மானவரெண்ணிறந்தோரர்பல்கி
யானவசுந்தராயெங்கும்பரந்திட்டா
ராகியேதேவனாணை
தானிகந்துபாவஞ்செய்மநுடர்வழித்
தோன்றலின்மன்சார்ந்தார்பாவம். ௧௯

ஆனமுறையிதனாலேயாதிமா
னுடர்வழியேயடையும்பாவ
வீனமுடையனவாகியாதியா
யழியுமியல்பில்லவாகிக்
கோனருணெறியொழுகினவனருணித்
தியசுகமுங்கோமானாணை
தானிகந்துவினைபுரியினித்தியமா
நிரயத்திற்சார்ந்துதுன்பும். ௨௰

ஆருமியல்பினவாகியொருபிறப்பே
யுடையனவான்மாக்கண்மேன்மை
சாருமனுடப்பிறப்பேயதுவுமும்மை
யம்மையவைதங்கட்கில்லை
பாரின்மரன்முதல்விலங்கீறானபிறி
சாதியறிவுறினும்பாத்துத்
தேருமறிவிலவதனாலுயிராகா
சீவராசிகளேதேரின். உ௧

மற்றையவிம்மானுடத்தின்வருமான்மாக்
களுக்குணவேயாதியாகும்
பெற்றிமையினங்கடவுள்பிடித்தளித்தா
னதுநிற்கப்பிறப்பானாதி
யுற்றமலனமினீக்கவொருமுதலாந்
தனைநாங்களுணரத்தேற்ற
முற்றறிவனொருசூழ்ச்சிகருதினா
னெனமேலுமொழிவன்மாதோ. உஉ

நம்மகிமையுணர்ந்துநமைத்தொழவேண்டி
நாம்படைத்தவான்மகோடி
தம்மவறிவிச்சைதொழிறலைநின்று
நம்விதியைத்தணந்துபல்ல
வெம்மைவினைகோலியுறுவெந்நிரய
முறநின்றவந்தோவந்தோ
வெம்மினொருமகனையவைவழித்தோற்றி
முறைசெய்தலெமக்குமாண்பால். உ௩

அருணீதியாயிரண்டுமுடையேமுக்
கறமிதுவென்றகத்துளெண்ணிப்
பொருணீயிப்புவியிடையோர்கன்னிவயிற்
புக்குதித்துப்போதநீடு
குருநாதனெனத்திரிந்துநல்லறிவுச்
சுடர்கொளுவிக்கொடியபாவ
விருணீங்கியுலகுய்யயாதனையுற்
றவைபொருட்டாலிறத்தியன்றே. உச

இறந்துமலர்த்தொலைத்தபினர்மூன்றுநா
ளவ்வுடலோடெழுந்தேநம்பாற்
சிறந்தவாதரவோடும்போந்தேநம்
வலப்பாலிற்சிவனுநீசொ
லறந்தலைநின்றுணைவழியொழுகினர்க்கு
நித்தியபேரின்புமல்லா
மறந்தலைநின்றுணைவழிவாரார்க்கு
நித்தியதுன்பதுவும்வைத்தும். உரு

என்றுரைத்ததந்தைமொழிதலைக்கொண்டே
சுதனுமெம்மிறைவனுங்கு
நின்றுமொருவிப்போந்துநீணிலத்தின்
வதுவைநிரம்பாதகன்னி
யொன்றுவயிற்றுதித்தரோவேரோது
வாதியோருணற்றுநீமை
நன்றுடாடந்திறையருளானனிவளர்ந்து
முப்பதின்மேனடக்குமாண்டில். உசு

பற்பலவூர்தொறும்புக்குப்பயின்றினிய
மொழியினல்யார்க்குமேற்ற
கற்புரையினுய்யுநெறிகடைப்பிடிக்க
வுபதேசித்திறைமைதேற
வற்புதங்களாண்டாண்டுக்காட்டுபுபே
துருவாதிய துலஞானப்
பொற்புமிகுசீடர்களையாய்ந்தெடுத்துப்
போதகாசிரியராக்கி. உ௬

அன்னவர்க்குத்தான்மொழிந்தவுறுதிமொழி
யாண்டும்போயறையச்சொற்றுப்
பின்னவர்க்குத்தானிறந்துபடுமாறு
மூன்றுநாட்பிரிந்தயாக்கை
துன்னியுயிர்த்தெழுந்தேதன்றுதைதனை
யடைந்தவன்பாறெக்குவைகு
நன்னயமுமன்னவர்க்காம்பின்னயமு
மறிவுறுத்துநண்ணினுல். உ௭

உறைநாளில்யூதரவற்கொல்லியசூழ்ந்
தாண்டுறலும்யூடக்கார்யாத்
தறைபோனன்சீடருள்ளேயேசுவையன்
னோர்பற்றியந்நாள்வேத்து
முறைபேணும்பிலாத்துவின்பாற்கொணர்ந்திவன்று
ன் றேவனெனமொழிந்தான்மூத்த
கறைவேலோயெனவவனுங்கண்ணோடான்
கடிதறைந்துகொன்மினென்றான். உ௮

காவலோரவனுணைவழியேசு
தனைக்கொடுபோய்க்காணுமிந்தப்
பூவலயத்தவர்கடுங்கமரத்தறைந்தார்
பொழுததன்கட்பொருவிலப்பா
வோவினையோவெனப்புலம்பியெம்பொருட்டா
லுயிர்துறந்தேயொருமூன்றுநாட்
டேவியலாற்கற்குழியினெழுந்துபர
நிலையதனைச்சேர்ந்தானம்மா.

சேர்ந்திடுங்குருமுன்போற்றிருத்தாதை
வலப்பாலிற்சிவணிவைகி
யோர்ந்திவண்சொலுறுதியினையுளங்கொண்டு
தனைப்பேணுமுண்மையன்பர்ச்
சார்ந்திடுதீவினைபொறுத்துத்தயைகூர்ந்தங்
கவர்ப்புரக்கத்தாதைக்கன்பு
கூர்ந்திடுநல்லுரைகூறிக்கொண்டிருக்கு
மென்றுபினுங்கூறுவானல்..

இங்கிறந்தமானவரையினியொருநா
ளழியுடலொடெழுவித்திட்டே
யங்குவருவித்திவர்செயறம்பாவ
நாடிமுறையழியாவின்பும்
பொங்குதுயருறுதுன்பும்புசித்திடுமா
றருளுமுறையேசுகூறுந்
துங்கநெறிவராச்சமயர்நல்வினைசெய்
யினுமுத்திதுன்றாரன்றே. கஉ.

இரண்டாவது

## பேசுவாதிசங்கற்பநிராகரணம்,

— ❧ —

பரனருபிவியாபியெனப்பகர்ந்தவனை
துணைபழுதாம்பாரின்மீதோர்
வரன்மரூஉநிலையதனின்வயங்கொரா
தனத்தின்மேன்மருவிச்சுத்தர்
பரவுறைகுவனென்னும்பான்மையினூற்
பரநிலையில்விளக்கமாகி
விரவல்பொருளெனிற்பரத்தினிடன்வலனன்
றேற்குன்மைவிளம்பலானும். க

இப்புவிக்கட்சீனுவென்றுணாபெறுமவ்
வோங்கலின்மேலேறிமோசே
யப்பரனும்யேகோவாவைக்கண்ணுற்
கண்டேனென்றறைதலானுஞ்
செப்புபரன்வெரிநன்றிமுகம்பினர்க்கண்
டிலன்சிலைக்கைவிரலாலன்றேன்
றுப்புறவன்றெழுதினனெனலானு
முருவனேயுன்சுவாமி, உ

வேறு.

அறிவுடைப்பொருளுமறிவிலெப்பொருளு
மாக்கியகருதுமுன்கோமான்
குறியுடைச்சந்நிதானமாத்திரையி
னிறையினிற்குலவிட வவற்றை
நிறுவிடப்பெருஞயாறுநாள்காறு
மொன்றென்றுநினைந்துசெய்தமையிற்
குறையுடைச்சத்திமானெனவிந்தக்
குவலயமதித்திடுமன்றே. ௧.

வேறு.

கற்பயனேகருதியுயிர் தமைத்தோற்றிக்
காவாமேதறுகட்பேயின்
கற்பனையாலவைபாவக்கடலழுந்தி
வருந்தவிட்டகடுமையானும்
பற்பலதீங்குகள்செய்வார்பண்ணினுமீன்
றவராருளேபாலித்தோம்ப
வற்பிலனுயற்பவழுவாற்சபித்த
லானும்பேரருளனல்லன். ௨

முற்றறிவுன்னிறைக்கிலையாற்றனுளரு
மன்றேதன்முதன்மைதேருங்
கொற்றவுயிர்ப்பிராகபாவம்முணரான்
பின்னுணர்ந்துகொண்டுதோற்றும்
பெற்றியினனென்றுந்தோற்றுவித்திட்டா
னெனின்மகிமையுணர்ந்துபேண
மற்றவையேயமையும்பின்றோற்றுவித்தற்
கேதுநீவகுத்தல்வேண்டும். ௩

அவ்வுயிர்களவன்மகிமையுணர்ந்தவனைப்
போற்றுதேயவற்குமாறாய்ச்
செய்வினையாலவைபோக்கித்திருத்தமுறு
பிற்சிருட்டிசெய்தானென்னி
லெவ்வறிவுமுதன்மையுமெம்பிறைக்கில்லையா
யிழுக்காமென்றிறுக்காயாய்க்கோ
ணவ்வியலையானறியவல்லனே
வெனமொழிதலடாதிங்கன்றே. ௬

தீங்குநலந்தெரிக்குமரந்தனைத்தோட்ட
நடுவணடிற்றீமைமார்ந்தர்
தாங்கியிடர்புகுதவோரேதுவா
மெனவறியான்சமைத்தலானு
மாங்கவர்தாம்பிசாசின்மயலாழாமே
தெருட்டவன்றேயேசுதன்னைப்
பாங்கருறவுதவான்பின்னுதவுதலா
னும்மறியும்பரனுக்கின்றே. ௭

நன்மகிமையுணர்ந்துதனைத்தொழவேண்டி
யுயிர்கடமைத்தருதலானே
யுன்னிறைக்குப்பூர்த்தியிலைசுதந்திரமு
மில்லையாமொருபேய்சூழ்ந்த
வன்மைபெறுசூழ்ச்சியின்மற்றதுமுற்று
மையிற்சமமுமருவுமுங்கோன்
றன்னுவலிபேய்வலியாற்பேய்வலிமற்
றவன்வலியாற்றொலைதலானே. ௮

நந்தைமகனாவியெனச்சாற்றுபொரு
டம்முளேயொன்றுமென்னி
னிந்தமுறைமூன்றெனலாற்பயனென்னே
யசாகளத்தின்முலைபோல்யான்ம
னந்தமுறையறியேனம்விவிலியநூ
லவ்வாறேயறையுமென்னில்
வந்தமுறையறியாநீமற்றவ்வகுப்பாற்
பயன்கொள்வகையெங்கேயோ. ௯

மகன்றந்தையிருவருமன்வேறெனவே
படுவரான்மகன்பிதாவை
யகன்றிந்தப்புவியினோரிவைவயிற்
றுதித்தலாலப்பாவென்னைச்
சகந்தனிற்கைவிட்டனையோவெனப்புலம்ப
லாற்சாற்றுமாவியந்த
மகன்றம்முள்வேறெனவேபடுவர்புற
வாய்ப்போந்துமருவலாலே. ௰

நடைபெறுமோர்காரியத்தினிகழ்ச்சிக்கண்
முதறுணைநன்னிமித்தமென்னு
மடைவுடையசாரணங்களவைதம்மு
ளொன்றையின்றியமையாவாறுந்
தொடர்புடையவவைதம்முண்வேறுகு
முறையுமிங்குத்தோன்றுகின்ற
கடமுதலெக்காரியந்துஞ்சாட்சியுள
வையினறியக்கிடத்தலானே. ௧௧

காரியவிப்பிரபஞ்சந்தனக்குமுத
றுணைநிமித்தகாரணங்க
ளோரிஞெருதலையான் வேண்டப்படுமென்
றேயறிஞருணர்த்தவுந்நீ
கூரியதோர்மதியில்லாமாத்துமிசன்
கோடிருடியிலிங்கயின்றிப்
பார்விசும்பாதியபாழிற்றருமிறையென்
றனுமானம்பண்ணலாமோ. ௯௨

அனுமானமன்றிதுமோசேமொழிந்த
வாத்தவுரையென்னிலன்றேல்
சினமாதிபொதிந்திடலிற்சிவணிடா
ஞேத்தனியதேவனன்றேன்
மனமாதிகரணங்கண்மருவாநின்
றுரைத்தலின்மற்றதுவாமென்னில்
வினைநீங்காமானுடரெல்லார்மொழியும்
பிரமாணமாதன்மேவும். ௯௩

சந்தான்மசேதனமேலதிட்டிப்பா
னறிவுதொழிலெல்லாஞ்சுத்தம்
பெந்தான்மசேதனமேலவைசுத்தா
சுத்தமாம்பேதைநீராய்
சந்தாவினதிட்டிப்பாலவனுரைக்குப்
பிரமாணங்கருதல்கூடா
இந்நானுன்விவிலியத்தேதேஞேர்மொழியும்
பிரமாணமாகாவின்றும். ௯௪

தன்மாட்டுப்பேரறிவுன்னிறையுடைய
னலனென்கைசாதித்தேமுன்
றன்மாட்டுப்பேரறிவில்லான்பசுவே
யதிட்டித்தலெங்ஙன்சாற்றுஞ்
சொன்மாட்டுப்பிரமாணமுறலெங்ங
னுன்னூலிற்றெருகுவமுன்னேச்
சொன்மாட்டியெழுதலொன்றினோடொன்று
மாறுதல்சொல்லுமீதே. ௧௫

எத்தொழிலுமியற்றுபெருவலியிறைக்குண்
டதனாலேயியம்புமூல
வித்தையின்றியுமுலகைவிளைக்குமெனி
னறியாதுவிளம்பினையொர்
கத்தன்வினையெலாம்புரியும்வலியெலா
முடையனேயெனினுங்காண
வைத்தவியலொடுபொருந்தவியற்றுவனன்
றிப்புரியான்மற்றொராறே. ௧௬

கண்ணுமுதற்காரணத்திற்காரியங்கள்
காணுமுறையுயிர்கட்காக்கி
நண்ணுமுதலின்றியுலகியற்றுமுறை
தன்னியல்பாநயக்குமென்னின்
மண்ணெனும்பென்றுணைக்குமுதற்காரணத்தின்
மானுடருக்குடல்களுங்கோன்
பண்ணிமுறைதிறம்புவதென்போலியுனை
யேடுகவும்பண்புளோனே. ௧௭

ஆவ்வுறுமெப்பொருட்குமுதலழியினவை
　　தொன்மைபோற்குயிற்றமாட்டா
னெவ்வுறுபேழையிற்குறிக்கொண்டோம்புமுன
　　திறைகொலோநுவலுமான்மா
விவ்வுறுபார்வானுதியெப்பொருளு
　　முதலின்றியியற்றவல்லா
னெவ்வுறுமோவிவ்வுணாதானுன்போல்வார்க்
　　கலதறிவாலுயர்ந்துளோர்க்கே.　　௧அ

பிண்டத்தைக்கரணமின்றிப்படைக்கும்வலி
　　யில்லாவுன்பிரான்மற்றிப்பே
ரண்டத்தைக்கரணமின்றிப்படைத்தனனென்
　　பதுநகையேயாக்கும்யார்க்கு
மண்டத்தினமைதியுடைப்பிண்டக்கோர்
　　முதலுண்மையகிலத்தின்கட்
கண்டத்திறைலண்டகாரியக்கு
　　மஃதுண்மைகருத்திற்றேர்க.　　௧௯

வேறு.

பாரும்வானமுமாண்டுறுசராசரமும்
　　படைத்தமைவிரித்தவன்றுடைநா
னீரும்பேரிருளுமங்கியுங்காலும்
　　படைத்தமைநிகழ்த்திடாமுறையென்
றேரும்போழ்தவைமுன்னுள்ளனவென்ற
　　லதன்றுணிபேலுறுவானென்
பேரிங்காமுன்னர்த்தங்கியதெங்குப்
　　பேசுகுனியத்திறேபேதாய்.　　௨௦

சொன்னவைதோற்றமுன்னரோயளப்பில்
வருடமுற்றோற்றினனெங்கண்
முன்னவன்வானும்பூமியுநீரு
மாகலின்முறையொன்றியவைதா
மன்னிடுமெனின்வான்வையநீரிவற்றை
வகுத்ததுமானவன்பொருட்டே
யன்னவன்றனையுமுடன்படையாமை
யாலஃதியைதராதன்றே. ௨௧

உறுபொருட்டோற்றமுனைப்பவேயுபலக்
கணத்திருலொழிந்தகாலாதிச்
சிறுபொருட்டோற்றம்பெறப்படுமென்னிற்
றிகழ்புனலனல்வளிதம்மிற்
குறுபொருட்டோற்றங்கூறுமவ்வுனைக்கட்
கொளப்படாதப்பொருளென்ப
தறிவுடைப்பெரியோரறிகுவரதனு
லாண்டஃதியைந்திடாதன்றே. ௨௨

ஒளியினைக்கண்டானென்னலாலங்கி
யுற்பத்திபெறப்படுமெனிவ்
வொளியினைப்பகலென்றுணாத்தலின்வானத்
தோங்குபானுவினெளிப்பரப்பே
யொளியுடைப்பகலென்றறிதலிற்பொருந்தா
துன்னுனையென்னைகேளுன்னு
லொளியெனப்பொருளின்வேறதாவிரவி
யதனைப்பின்னுதிப்பித்தானெனலால். ௨௩

அறிவின்மையறிவினபாவமானதுபோ
லாரிருளொளியினதபாவம்
பெறுதியுள்பொருளாகாதெனினறிவுப்
பேரொளியாகியகடவு
ணிறைதலின்யாண்டுநீக்கமதின்றி
நீசொலுமபாவமற்றெங்ங
னுறைதருமுலகிலஞ்ஞானமென்ப
தொருகுணமுளக்குணிமலமே. ௨௪

விளக்கமுஞ்சூடுநீங்கிப்பெறுங்காறும்
வெந்தழலுள்பொருளாகும்
விளக்கமுஞ்சூடும்வீந்திடிற்றழலும்
வீந்துமற்றில்பொருளாகுங்
கொளப்படுமிதனாற்குணங்களின்செறிவே
குணியெனக்கூறுயிர்க்குணமாக்
கொளப்படுஞானநீங்கிடவபாவங்
கூடுமோறெங்ஙனங்கூறாய். ௨௫

கண்டிடுமியல்பிற்றேகண்டானன்றிக்
காணொணுவியல்பிற்றேசழறாய்
கண்டிடுமியல்பிற்றன்றெனினேனை
யவயவம்போற்கதிருறினுங்
கண்டிடாதாங்கணுதலிற்காணு
மிபற்கைந்தேகன்ணெனவுணர்க
கண்டிடவிடாதேதகைதலோர்வினைமற்
றதன்முதல்காரிருளென்றோர். ௨௬

நீருறுநீழுனீருறுதட்ப
நிலவிடாதடங்கிமோபோற்
பாருறுமொளிமுனிருணிலவாத
பண்புடைத்தென்பஃதறியாய்
கூருறுமொளியோடொன்றியவிழியாற்
கொளப்படாமையினிருளொளியென்
பேரினதபாவமென்றிநீயபாவ
மொருதொழில்செய்யுமோபேதாய். ௨எ

பரிதியின்றோற்றவொடுக்கங்களானே
பகலிராப்பாகுபட்டியற
லொருதலையாகநான்கெனும்வைக
றொடங்கியதென்னுமுன்னுடைநூல்
வருமுதலிரண்டுமூன்றெனவதன்முன்
வகைபெறத்தினமுறைகிளத்தல்
கருதியாய்வோர்க்குநகையையேநிறுத்து
மென்றுணர்கழிமடவோனே. ௨அ

சிட்டிசடொறுமுன்முடிவினுட்கிடந்த
காலத்தைத்தினமதாவண்டே
சுட்டியதன்றிச்சுடரினுந்தினத்தைச்
சுட்டியதன்றெனிஞண்டுப்
பட்டிமைவல்லோய்பகருமெற்பாடு
மாலையும்பரிதியாணியலு
மட்டுறுதினமேசுட்டலிற்போலி
வாசகமாமுனதுரையே. ௨௯

வேறு.

சொல்லானேயெப்பொருளுந்தோற்றினனெம்
மிறைவனெனச்சொற்றுயற்றுற்
சொல்லானேயெப்பொருளுநிறுத்துமவை
போங்காலநோக்கியந்தச்
சொல்லானே துடைக்குமங்ஙன்முத்தொழிலும்
பினுஞ்செய்யுமென்கைதோன்றுஞ்
சொல்லாலிங்ஙனஞ்செயுநுஞ்சுவாமிகுலா
லாதியரிற்றுடக்கிற்றுழ்வான். ரு0

றும்பெரும்பூதத்தமைதிமானுடயாக்
கையிற்காட்சியளவைதன்று
லிம்பரொவர்க்கும்புலனுயிருக்கவதை
மன்னிறுலியற்றிருனந்
தம்பெருமானெனப்புகறல்சழக்கேமற்
றதுகிடக்கத்தனைப்போல
நும்பெருமான்மானுடனைப்படைத்தனனென்
பதைமறுத்துநுவறுமேலே. ருக

கத்தாத்தன்போன்மனுடற்படைத்திடுவான்
கருதியவற்கண்டானென்று
யெத்தாற்றன்றனைப்போறன்முற்றறிவா
லெனிலஃதீண்டியையாதென்னே
பித்தாகேளஃதுளனேற்பிசாசின்மயற்
படானினியப்பிறங்குசுத்த
சித்தாலென்றிடிலசுத்ததேகத்திற்
றுடக்குறன்செப்புவேறே. ருஉ

அருவத்தாலெனி னுருவமுடையவனுக்
கஃதிசையா தாகும்வல்ல
கருமத்தாலெனின்வலியாற்கண்டிலனு
லோர்பொருளுங்கழறுதேவ
பொருவெத்தாற்போந்ததுபின்புண்ணியபா
வந்தெரியாப்புணர்ப்பினுலோ
வுருவத்தாலோ விரண்டினுென்றுனே
யொப்போதலுண்மையாமே. கக

மண்ணினுற்றுனமைத்தவடிவுறுநா
சித்துளையினுயிர்க்காறன்னை
யுண்ணிலவநங்கடவுளூதினனென்
றுயதனுலுங்கோமானுக்
கண்ணவாய்வடிவுண்மையறிந்தனமற்
றதுகிடக்கவுங்கோவுள்ளே
நண்ணுகாறுனேமண்ணுருவினுழைந்
ததுநன்றுநாட்டினுய்நீ. கச

காலதைமானுடவுடலிற்கண்டனமற்
றஃதான்மாவாகாதுண்டி
சாலும்வினையஃதியக்குமுறக்கத்திவ்
வுடலின்கட்சாராவாற்று
லேலுமுயிரதனின்வேறுதலருத்
தாபத்தியென்றேயோது
நூலளவையதனுலேசித்திக்கு
மதனியல்பைநுணுகியாய்தி. கரு

இறையானேன்றனிலொருகூற்றினைப்பிரித்துப்
புகுத்தினனெண்டென்னினந்த
விறைகூறுகானகண்டனேதலினவ்
விறைதானேநுழைந்தானென்று
விறைகூறிலவனைநீவியாபியென
லமையாதாமிலதொர்சித்தை
யிறையானேனிறுவியூதினனென்கை
பொருந்தாமையிசைத்துமுன்னே. கூசு

இயமானனியல்பினையுன்விவிலியநூ
லொருசிறிது மிசைத்ததில்லை
யியமானனியல்பினைநீயெங்ஙனே
விசைக்கும்வகையென்னிசெய்வா
யியமானனியல்புணராயிறையியல்பெங்
ஙனமுணர்ந்தாயினி திஞேர்க
வியமானனனெதிநித்தனுணர்த்தவுண
ரறிவாதியுடையனென்றே. கூஎ

ஒருத்தி துணையாவளெனவுங்கோணீ
வினையறியாதுதிப்பித்தந்த
வொருத்தனுக்குப்புணர்த்தினனவ்வொருத்தியவ
னைப்பாவத்தழுத்தினுளுங்
கருத்தனுக்குப்பேரறிவோசிற்றறிவு
மிலையிந்தக்கடல்சூழ்ஞால
மருத்திமடவார்ப்பயிற்சியருந்தவருக்
காகாதென்றறியுநன்றே. கூஅ

எத்தொழிலுமின்றியேயிறைவன்வா
ளாவிருந்தேயேழாநாளைச்
சுத்திசெய்தானென்றனையத்தொல்லுலகு
முயிருநனிவகுக்கநின்ற
வத்தினங்கடமைச்சுத்தமாக்காத
காரணமெனருத்தவாக்கஞ்
சுத்தமிலதோசனனவாசௌசந்
தொட்டதோசொல்லாய்கல்லாய். ௩௯

ஆற்றிலனெத்தொழிலுமேழாந்தினத்தி
லெனிலுங்கோனரிதினெண்ணித்
தோற்றியவெப்பொருளுந்தம்மியற்றிறம்பா
வகைநிற்கச்சொன்னவேழிற்
போற்றுசெயலும்புரிந்தானல்லனோ
வல்லனேலவற்றைப்போற்ற
வீற்றொருதேவேண்டுமாற்புரிந்தானேல்
வறிதிருந்தானென்னல்வீணாம். ௪0

பூமியினைச்சிருட்டித்தபோழ்தேமா
னுடர்வசிக்கப்பொருந்தொர்தோட்ட
மேமமுறவதனொருசாரிதுவேண்டு
மானுடருக்கென்றேமுன்னர்த்
தோமிலறிவாலறிந்தேமற்றதுசெய்
யாதுபினர்ச்சூழ்ந்துசெய்த
சாமியையோமுற்றறிவுமுழுத்தொழிலு
முடையனெனச்சாற்றுவீர். ௪க

பயனேக்காமுயற்சியினைமந்தர்களும்
விரும்பார்கள்பாரில்யாது
நயனேக்காதுங்கோமான்சீவமரத்
தினைத்தோட்டநடுவண்வைத்தான்
மயனேய்க்குவித்தாகவேறுமொரு
மரம்வைத்துவகுத்தான்றீமை
யுபுநோக்கமுடையோர்களுங்கோவைக்
மறந்தேயுமுன்னுரன்றே. சஉ

நடுவணுறுநலந்தீங்குதெரிக்குமரக்
கனியதனைநரநீதின்னத்
தொடுதலொழியெனவுங்கோன்சொற்றதரு
ளன்றதனுற்றுல்யனுகி
விடுவனெனவெண்ணியேயென்கைதெளிந்
தனநம்மின்மேம்பாடுற்றுன்
ஞெடுகடல்சூழ்நிலத்துநரனலந்தீங்கு
தெரிந்தென்றுதுயர்தலாலே. சங

தன்னைத்தன்மகிமையறிந்திறைஞ்சநரற்
படைத்திட்டசாமியன்றே
னன்னர்த்தன்மகிமையும்பேய்தீமையுநன்
கறிவோனுத்தரலேநன்கா
மன்னற்கவ்வறிவுதனையுதவாமே
தரலுமதுபழத்தினன்றுன்
றுன்னத்தந்திடுகையுமற்றம்மம்ம
பெருவியப்பாஞ்குழுங்காலே, சச

சருப்பத்தின் மறைந்ததுபேயென்றனைமற்
றதன் சிருட்டி தன்னையுன்னா
னைப்பக்கேட்டிலமதனலதுவுமோர்
முதலாகுமுயருமுத்தி
யிருப்பிற்றேவுடனுறையும்புனிதரவ
ரணைகடந்திறுமாந்தேதம்
விருப்பத்திற்கலாம்விளைத்துமற்றவன்சா
பத்தினல்வெறிகளானர். சரு

மற்றப்பேர்பேயாயும்வலியபகை
யாயினரிறைவற்கிந்தப்
பெற்றிப்பேயிறைவன்போன்முதலாகா
தெனிற்பேயின்முதன்மைபோக்க
வுற்றுப்பார்த்துரைத்ததுவுமதன்முதன்மை
நிலையிட்டதுன்றனேக்கஞ்
சுற்றிப்போயுஞ்சுங்கத்துறைசேர்ந்த
நியாயமேசூழுங்காலே. சசு

முத்தராயிருந்தோர்கள்கலாம்விளைத்தா
ரெனினீசொன்முத்திமேன்மை
யெத்தனையென்றெடுத்துரைப்பேமதுகிடக்க
வுறுவலியானிந்தப்பாரிற்
புத்தியிலாக்கலர்தமையுநான்குபா
யத்தினறநெறியிற்போக்கி
யித்தனைகாவலராள்வர்முத்தரையா
ளாற்றலுங்களிறைவற்கின்றே. சஎ

இங்கடல்சேர்புலனைந்துமறிவினு
னனிவாட்டியிடையறுமே
தங்கடனமெனத்தவமேயோம்பிநில்
முதற்பொருள்கடமையுங்கைவிட்
டெங்கடவுடனையடைந்துபேரின்பநுகர்துமென
விறைஞ்சுவோர்க்கிச்
சங்கடமாமுத்தியையோவுங்கடவுள்
கொடுப்பனிதுசாலநன்றே. ௪௮

பேயினியல்பானோர்கண்முத்தரென
நீயெடுத்துப்பேசுமாற்று
னீயுரைசெய்முத்திநிலைபேயுலக
மென்றுமுங்கோனிலையாண்டு
மேயினனென்றும்மவனோடுவைக்குமிகு
பகையுலகில்வினையுமென்று
மேயுரைசெய்திடுமாற்றலவனுமோர்
தலைமைப்பேயென்றுமாமே. ௪௯

பொறிவலியின்மானுடனைநலந்தீங்கு
காட்டுபழம்புசிக்கவென்று
நிறுவும்வழியலகையஃதறிதரவே
நிறுவினனுங்கோமானென்கை
யறிதுமஃதறிந்தழித்தகாரணத்தா
லறியாமேநிறுவினுனேல்
வெறியதுவுமிறைவனைப்போன்முற்றறிவிற்
றென்றேநீவிளம்புபேதாய், ௫௦

நலந்தீங்குபகுக்குமனவுணர்வின்றி
நடைப்பிணத்தைப்பொருவுமாந்தர்
பலந்தாங்குநல்லூறுதிபயக்குமறி
விச்சைதொழிற்பகுதிபூணக்
கலந்தாங்குநல்லறிவுச்சுடர்கொளுவும்
பேய்முயற்சியருளேசுத்தாப்
புலந்தாங்குச்சபித்தனன்மற்றதன்சூழ்ச்சி
தனக்கிடைப்புரிதலாலே. ருக

தீங்கிளைத்ததேற்பிசாசதனையே
சபித்தன்முறைதெருளிலாதே
பாங்குறைபாம்பினைச்சபித்ததநீதியே
யெனவுணர்கபகரும்பாம்பதை
தாங்கதனுக்கிடங்கொடுத்தகாரணத்தா
லதைச்சபித்தனீதியென்னி
லீங்கறிஞர்வெறிக்கன்றியதைத்தாவே
சிக்குமகற்கினல்செய்வாரோ. ருஉ

பேதமையானுகபெருங்கிழமையா
னுகபிழைத்திடுதல்பேசின்
மாதராடவர்க்கியல்பாமறிவின்மாண்
டோர்க்கவற்றைப்பொறுத்தன்மாட்சி
காதல்வேண்டிடினருளாற்கடிதோச்சி
மெல்லவேயெறிவர்கத்தா
வேதுமருளின்றியுறுசாபமவர்
பால்விதித்ததென்னமாட்சி. ருங

## யேசுமதசங்கற்பநிராகரணம்.

கருத்தரித்துவருந்துகநின்கணவன்கீ
ழிருந்தடங்கிவாழ்கவென்றே
யுருத்துரைத்தான்கடவுளெனவோதினைமற்
றதுதன்னையுணரின்மாதைக்
கருத்தரிக்காமேகணவற்கடங்காமே
யுறவெண்ணிக்கண்டானென்கை
யருத்தமாதலிற்றுணையாமாறிலையா
ளுத்தரவுமமையுமன்றே.

பேயின்வசமழிந்தேயுன்விதிகடந்தேன்
பெரியோனேயென்னும்பெற்றி
யாயினறிவில்லாதவடியனேன்
பிழைபொறுத்திட்டருள்வாய்கல்லாச்
சேயினுறுபிழைபொறுக்குந்தாயினெனக
குறிப்பித்தறேற்றவிவைக்
காய்தலையேமேற்கொண்டவன்கணேறு
பிழைபொறுத்தாள்கருணைவள்ளல்ஃ

நண்ணிலவுநலந்தீங்குதெரிக்குமரக்
கனியதனைநசையானீதா
னுண்ணினுடனழிகவெனுமுங்கடவுள்
விதியபலமாகவன்றேன்
மண்ணின்மடியாதிருந்ததென்பாவ
வீழ்ச்சியேமரணமென்னி
னெண்ணிமொழியுமிஃதுடன்வீக
வெனுமுரையொடிசையாதன்றே.

மண்ணினுருவாகியநீமண்ணுவை
யழிந்தெனு நூல்வசனமான்மா
நண்ணுமுடலழிவையேயதனழிவாக்
கூறுதலினுடுமான்மா
வண்முநிலைகூறுமேயொழிதலினித்
தேகமேயான்மாவென்கை
யெண்ணியிதையெழுதினேன்கருத்தாம்பின்
றிருத்தினுரேனையோரே. ருஎ

அறம்பாவத்திறந்தெரியுமறிவாற்றன்
மானவனுக்கானதந்தோ
திறம்பாநற்சீவமரக்கனிதின்னி
னழியாவத்திறமும்பூண்பன்
புறம்போகவிடுதுமெனவழுக்கறுத்த
வுங்கோவின்புணர்ப்புநன்றிம்
மறம்பாவமுடையனையோமன்னுயிருக்
கருள்புரிமெய்வள்ளலென்பாய். ருஅ

ஆதிமானவர்பாவமவர்வழியா
முயிர்க்கெல்லாமடுத்ததென்றே
யோதியோர்சிறிதுமின்றியுனாத்தாய்மற்
றுதியோருஞற்றுபாவந்
தீதில்வழியுயிர்கடமைத்தானேசென்
றடையாதுசடத்தாற்சேரா
கோதிலுயிர்முன்னிலவாய்க்கருப்பத்தே
யுடன்றோன்றுங்கொள்கையாலே. ருகூ

பேய்முதலாமெனவெண்ணிப்பேயுயிரைப்
பாவத்திற்பிணிக்குமென்று
நீயுரைசெய்திடமாட்டாயினிப்பாரி
சேடத்தானிலவுங்கோனே
யாயினுயிர்களைமுன்னோராற்றுபா
வத்தினியாத்தலைப்பானெனித்
தாயனுயிர்களைமுன்னோர்பாவத்தி
னியாத்தலைத்தன்முறையோசொன்னீ. கூ0

தொல்லையோர்சுக்கிலத்துஞ்சோணிதத்துந்
தோன்றலினைத்தொல்லோர்தம்மைப்
புல்லுபாவம்மக்கடமைப்புல்லன்
முறையென்னிற்புலனிலோனே
வல்லனுமுங்கடவுள்பாவத்தாற்
கெடுந்தொல்லைமனுடர்ப்போக்கி
நல்லராநரர்ப்படைத்தங்கவர்வழியி
னரர்த்தோற்றனலமாகும்மே. கூக

செந்நெறிமற்றீதிருக்கத்தியோர்கள்
வழியினுயிர்ச்சிருட்டிசெய்யும்
புன்னெறியையுங்கடவுண்மேற்கொள்ளு
முகத்தானேபொருவில்வன்மை
நன்னெறிதன்றனக்கின்மைநாட்டினு
னதுகிடக்கநயனிலீசொ
லின்னெறிதானும்மறிவிறேகான்ம
வாதத்தொழியையுமென்றோர். கூ௨

வேறு.

தந்தைதாயாவியிரண்டினுங்கூறு
தாம்பிரிந்தேகமாயவர்த
மைந்தரான்மாவாய்வந்திடுமீண்டுத்
தீபத்தின்மற்றொருதீபம்
வந்திடுமுறையினென்றிடிற்றீப
மிரண்டினுமருவிடாபேத
மிந்தமாநிலத்திற்றந்தைதாய்கூற்றி
னெய்திடுமைந்தரானோர்க்கே. ௯௮

அறிவொடுதொழிலேகுணங்களேமுதல
வதிகமாய்விரிந்துமற்றுங்குக்
குறைதலேதிரிதன்முதலியவிகாரங்
கூடியும்வருதலாலான்மாப்
பெறுமிருதந்தைதாயரான்மாவிற்
பிரிந்திடுங்கூற்றினுருவவென்
றறைதரலமையாதல்லதூஉங்கூறு
படுதல்சித்தினுக்கமையாதால். ௯௯

வேறு.

இல்லாதபொருடோற்றலிலையாமுக்
காலத்துமென்கைமாறும்
பல்லாயசமயங்கூடமக்கெலாந்
துணிபாகும்பகரிவ்வாய்மை
நல்லாணயுந்தியினோடனுபவக்கும்
பொருத்தமாய்நனுசநீயோ
பொல்லாதவிவிலியப்பொய்நூல்கொடில
தோன்றுமெனல்பொருந்தாதன்றே... ௱

உன்கருத்தன்வலியினிலாவான்மாவைப்
புதிதாகவுளதாச்செய்த
றன்பொருட்டேகுறைவுளறுமிவ்வண்ணஞ்
சிருட்டிபுரிதலைவனன்றே
மன்பொருட்பேறுருவுயிரைத்தன்பொருட்டுத்
தோற்றியிவணலைத்துமாய்த்துப்
பின்பிருட்டாம்வெந்நிரயத்துன்புறுத்த
லறனுமோபேதைநீராய். ௬௬

பிள்ளைக்கோர்விளையாட்டுச்சிற்றெலிக்குப்
பிராணவிமோசனமென்றாங்கும்
வள்ளற்கோர்விளையாட்டுப்படைத்தலைக்குஞ்
செயலந்தோமற்றதான்ம
கொள்ளைக்சோபெருந்துயரக்கடற்படிவா
மடவோனேசோதார்கோளீ
தெள்ளற்கேயிடனுகக்கட்டிவிடும்புரட்டென்றிங்
கியார்தாஞ்சொல்லார். ௬௭

உற்பத்தியுடையவெலாமழிதலுல
கிற்கண்டாமதனுனீசொ
லுற்பத்தியுடையவுயிரழிதலொரு
தலையாகுமொருதேவாவி
யுற்பத்திசெயவதனையழியாமே
நிறுவவலியுடையனென்னி
லுற்பத்தியிலிர்த்தனையுமநித்தியனுக்
கிடும்வலியினென்றுமோதூ. ௬௮

குறைவில்பெருவலியிறுற்கோமானெத்
தொழிலுநனிசுயிற்றுமென்றே
யறைதியதன்சொருபமறியாமையிலு
னித்தியத்தொடநித்தியத்தை
முறையினநித்தியமொடுநித்தியமாக்க
லிலதோற்றன்முதலவாகா
விறைவனொருதனையநித்தருக்கன்முடி
யாமையினென்றெண்ணிக்காண்டி. கக

வேறு.

அநாதியதாகும்பொருள்பதியொன்றே
யாருயிர்பாசமப்பதிபோ
லநாதியவாமேற்பதியையொப்பிலியென்
றறைதருமிலக்கணஞ்சிதையு
மெனுமயல்கொண்டக்குறைவிலியென்னு
மிலக்கணஞ்சிதையநீயுயிரைத்
தனுதனுபவக்காத்தருமவனெனல்தேட்
கஞ்சியேபாம்பில்வீழ்தகவாம். ௭௦

பதித்துவமிறைவற்சநாதியோவாதிப்
பான்மையோபகருதியைய
பதித்துவமநாதியன்றெனினில்லாப்
பதித்துவமிடையில்வந்தெங்ஙன
னுதித்திடும்விகாரமுறுதலுநேரு
முளதஃதநாதியேயென்று
மதித்துணர்தோற்றல்காத்தலோடழித்தன
மருவலாங்கருணைமற்றதுவே. ௭௧

ஆகவேயாக்கல்காத்திட்லழித்த
லாமருட்டொழிலவைமூன்று
மேகநாயகனுக்கனாதியேயுண்மை
பெறப்படுமியம்புமம்மும்மைப்
பாகநேர்தொழில்கடன்பயன்கருதிப்
பண்ணிடான்பூரணனதனா
னாகமோடுணரத்தொழிற்பயன்கொள்ளு
முயிர்களுமனாதியுண்டென்றே. ௭௨

யாதினைத்தோற்றல்காத்திடலழித்த
லென்றிடிணியம்புயிரியாத்து
வேதனைபுரியுமலப்பிணிதீர்க்க
வைத்தியனாகியவீசன்
கோதிலாமருந்தாமனாதிமாயையினவ்
வுயிர்க்குடல்கரணமேகுலவும்
பேதமார்புவனபோகமாம்பிரபஞ்
சத்தினையென்றுணர்பெரிதே. ௭௩

முற்றறிவாதியெண்குணமிறைக்கு
மொழிசிறப்பிலக்கணமவையின்
மற்றையாண்மாவும்பாசமுமனாதி
மருவலாற்சமமுருசதசற்
பெற்றிதேரறிவுசிறப்பியலுயிர்க்குப்
பேசுமவ்வறிவிலாச்சடமாங்
குற்றநேர்பாசமனாதியதேனு
முயிரொடொப்புறுதெனக்கொளாதே. ௭௪

பெற்றிடினனாதியொன்றுமெய்யுயிரும்
பாசமுமிறையியல்பெல்லா
முற்றிடுமென்றுகுதர்க்கமன்கோலி
யுலம்புதற்கேதுபொய்பொதிந்து
கற்றிலாரியற்றும்விவிலியமயக்கிற்
படுதலேகழறுமுப்பொருட்குஞ்
சொற்றிடுமனாதித்தன்மைநீசொல்லு
மழிவின்மைபோற்பொதுச்சொலினே. எ௫

மலத்தினீங்கிடுதலனாதியேமுதல்வன்
வினையதுபோலுயிரனாதி
மலத்தினீங்கிடாமேபற்றுபுவழுந்தன்
மற்றதன்வினைகதிரெதிரோ
நிலைத்திடுமேனுமொளியிழந்தழுந்தும்
படலஞ்சேர்நீள்விழியிருளி
னிலைத்திடுமேனுமிறையெதிர்பசுக்க
ளறிவிழந்தழுந்துநீண்மலத்தே. எ௬

குற்றமுங்குணம்போலோர்பொருளிடத்தே
விரவிடும்விரவினுங்குணம்போன்
மற்றதப்பொருளினீங்கிடாதென்றன்
மடமைசெம்பினையுறுகளிம்பு
சொற்றிடுமிரதகுளிகையினீங்கக்
காண்டலிற்றேறுமெனுமலமும்
பற்றறவுயிரினீங்கிடும்பரிசிற்
றுயிரிறையருளுறாஉம்பதத்தே. எஎ

வேறு.

பத்தராயாணைவழிவந்தார்க்கு
நங்கடவுள்பரமவைப்பி
னித்தமாமின்பளிக்குமென்ருய்முன்
னித்தமெனுமின்பமார்ந்து
முத்தராயிருந்தோர்கள்கலாம்விளைத்துப்
பேரின்பக்கிடையேமுட்டிப்
பெத்தராயலைகின்ருரென்ருய்பே
ரின்பநித்தப்பெற்றிபொய்யே. எஅ

சொற்றவுனதிறையிருப்புப்பரலோகத்
துளதென்றுசொற்ருயற்ருன்
மற்றவிறைதனையடையும்பத்தர்களு
முருவினராய்வாழ்வொன்கை
பெற்றனமாலுருவுளதாவினையுளதா
மஃதுளதாப்பிணியுமுண்டாண்
டுற்றவர்யேசேகாவாவொடிகலிமய
லாதலிதற்குறுசான்ருமே. எகூ

ஆணைவழிவருதலினுலாம்பயனு
மாருயிர்க்கேயதுபோலந்த
வாணைவழிவராமையினுலாங்கேடு
மாருயிர்க்கேயருள்சேரண்ண
லாணைவழிவாராதபாவநோய்
தனைத்தண்டமருந்தித்தீர்த்திட்
டாணைவழிவரச்செய்துபேரின்ப
மளித்தலேயருளாமற்ருல்-

உன்னிறைவனிணைவழிவாராரை
யருநரகிலுய்த்திட்டென்று
மின்னல்படுவானென்கைபோலாதா
மெறிதிரைநீருடுத்தபாரின்
மன்னவர்தந்தையர்குடிகள்மக்களற
நெறியின்கண்வாரார்தீமை
துன்னுவினைசெயினருளான்வினைக்கேற்ப
வொறுத்தருளேதுறத்தலுங்காண். அக

துன்பமெலாநீங்கவுயிர்தூய்தாகிப்
பேரின்பந்துய்க்குமாற்றுற்
றுன்பமில்பேரின்பவீடதைமீளாக்
கதியாகத்தொகுத்தலும்மற்
றின்பமுயிரடையாமேதுன்பமே
யுறநின்றவேதுவாலே
யின்பமிலாநிரயமதைமீள்கதியா
வமைத்திடலுமுறையாமென்றே. அஉ

சித்தாந்தசைவநெறியுணர்க்குமறை
யொடுமுரணச்சீயான்மாக்கள்
கத்தாவின்விதிகடக்கிற்பிசாசகதி
தனைமருவிக்கதியின்மீளுஞ்
செத்தாற்றீவினையின்மீளாநரகிற்
கிடந்தழுந்துமென்றுசெப்பும்
பித்தாவுன்னூலருணூலன்றுபிராசங்
கினர்சழக்குப்பிணக்குநூலே. அங

பிறப்பொன்றேயென்றாய்முன்பெத்தரா
யிருந்தோர்கண்முத்தராகிச்
சிறப்பொன்றித்தீமையினாற்பிசாசாகிச்
சனித்திங்குததிரிவரென்று
மிறப்பொன்றினோர்கள்பினும்பிறப்பொன்றி
யெழுவராலென்றுமோதன்
மறப்பொன்றினாய்கொலோபிறப்பொன்றே
யெனவுனக்குவாயேதையா. அச

மெய்யறிவுதனையாக்கிவீடுறற்கோர்
சாதனமாக்கொடுத்தமெய்கொண்
டையறிவுபெருக்கியஃதடைதரா
வுயிர்மறித்தும்பிறந்தேயந்தப்
பொய்யறிவுபொய்யாகமெய்கண்டு
வீடுறாவும்புசிப்பொன்றற்காச்
செய்பொருளையிழந்தவன்மற்றதுமறித்தும்
பெறவியதனைத்தினைத்தல்போல. அரு

சில்லோரைக்குருடராச்சில்லோரைச்
செவிடராச்சில்லோர்தம்மை
நல்லோராச்சில்லோரைத்தீயோராச்
சில்லோரைநலமார்செல்வ
மில்லோராச்சில்லோரையுள்ளோராச்
சில்லோரையெழிலோராகக்
கல்லோராச்சில்லோரையறிஞராச்
சில்லோரைக்காணலென்னே. அசு

வேறு.

இப்பிறப்பதனையெய்திடும்போழ்தே
யிவ்விகாரங்கண்மேவுதலி
னுப்பிறப்பின்கணுறுநற்றிருவினையே
யோதலாங்காரணமென்றே
ரொப்பெருவலியுமுடைமையினுலக
நடைபெறற்கிவைசெய்தானெனலுந்
தப்பினைப்புரியாறுகலிற்சித்தப்
படிதருமென்னலுந்தவறாம். அஎ

வேறு.

ஆதலினுலாருயிர்கட்கும்மையம்மை
யுளவென்கையமையாதென்றல்
பேதைமையேயெனவுணர்கபெருமைசேர்
நியோகத்தினமர்ந்தோராங்குத்
திதுபுரியிற்கீழுமாங்கிருந்து
நலம்புரியின்மேலுஞ்சேர்த்து
நீதிமனனின்வினையாலாருயிர்க்கீழ்
மேற்பிறப்பினிறுத்துமீசன். அஅ

வேறு.

தேவநரவருக்கங்கள்சித்தவறிவுடனே [கு
செவிமுதலைம்புலவறிவுமுடையனவவ்விலங்
மேவுபறவைகளைந்தும்வண்டுதும்பிமுதல [று
மேலொன்றிறன்குமெறும்பாதியொருமூன்
நாவறிவுமூறறிவுமாயிரண்டுமெந்த
நந்தாதியூரென்றுமரமாதியுடைய
பாவபுண்ணியத்திறத்தினானவதிகத்தாற் [மாம்.
பகருமவைபிறப்பேழிற்பல்வகையோன். யு

வேறு.

ஊனுறுமுதலறிதலின்றொருமகனிற்
றன்பொடின்பழுறலானன்றி
தேறியதுசெய்தோரைக்காத்திடலாற்
றமக்கிடுக்கண்செய்தோர்த்தேறிக்
கூறுபலநாள்கழிந்துங்கோறன்முதற்
றீங்குபுரிகொள்கையானற்
பேறிழவின்மகிழ்ச்சிதுயர்கூடலான்
மிருகாதிபிறங்கான்மாவே.　　௬௦

வாக்குநடைக்கருவிமுதலியவில்லா
வொருமகனின்மாண்பிலாத
யாக்கையைமேவுயிர்வெறியின்வசனகம
ருதிவினையியற்றல்காணேம்
பூக்குமரநந்தெறும்புவண்டுபறவைகள்
விலங்கினுடல்கள்புக்க
வூக்கமுடையுயிர்களுமனமுதற்கருவி
குறைதலினேர்ந்துற்றுநம்போல்.　　௬௧

கிழப்பருவத்தினர்மூர்ச்சைகிட்டினோ
ருடம்புநனிகிளர்ந்துமுற்று
மழப்பருவத்தினர்நம்போன்மக்களுடம்
பினைமருவிவைத்துநன்றாய்ந்
தளப்புறுமத்தகையறிஞராகாமே
மராதிகளினறிவுகுன்றி
யுழப்பிலராகுவருவரினுற்றவுயிர்
விலங்காதியுடலினென்றோர்.

வேறு.

ஒருமரத்தினுயிரொன்றேற்கொம்பொசித்துநட்டா
லுய்யுமுயிரொன்றுபலவாமோவென்னிற்
கருமரத்தின்வித்துவேர்கொம்புகொடிகிழங்கு
கண்கலந்துகொள்ளுமுயிரண்டம்வேர்ப்புத்
தருபிறப்புச்சராயுசங்கள்சனனமும்பெற்றாற்போற்
றானடையுமுற்பீசந்தலநடவாவென்னிற்
பெருநிலத்திற்காலிலார்நடப்பரோபேதாய்
பிறப்பின்விதமனேகங்காண்பேசுங்காலே.

வேறு.

மக்கடமக்கிதஞ்செயல்போன்மாநிலத்தின்
விலங்குமுதல்வருக்கநின்ற
தொக்கபலவுயிர்களுக்குஞ்சோர்வானுந்
துயர்புகுதாநெறியைநாடி
மிக்கவிதஞ்செயலறமாமருளின்றி
நரர்க்குணவாவிதித்தானென்னி
னக்கொடுமையதனுணத்தேவனிர
யத்துன்பத்தாழுமென்றார். ௬௪

தன்னுயிருக்கின்னாமைதானறிவா
னொருவன்விலங்காதியேனை
மன்னுயிருக்கின்னாமைசெயன்மயக்கே
மற்றவன்றான்மனிதயாக்கை
துன்னினனேனும்மனிதனவனோ
புலானசையினுழலுந்துட்ட
வன்மிருகமேயவன்றன்வயிறுமோர்
சுடுகாடுமெதிக்கின்மாதோ. ௬௫

தந்நோயிற்பிறிதுநோய்போற்றோ
லறிவினுற்றமக்குண்டாவ
தென்றேமற்றொன்றனுயிர்தன்னுயிர்ப்
பிணிநீக்கலென்றார்மேலோ
ரன்றேமற்றதனின்றித்தினற்பொருட்டாற்
பிறிதுயிரையலைப்பாய்நாளு
மெந்நோயுமுனைப்பற்றிவிடாவய்தி
வேண்டிலுயிர்க்கினல்செயலே. ௯௬

சீவகாருண்ணியமேசெப்பினற
மனைத்தினுமன்சிறந்ததந்தச்
சீவகாருண்ணியமேயறச்செல்லா
மூலமாய்த்திகழுமாயிற்
சீவகாருண்ணியமேமக்களுயி
ருறுதியெனத்தேடுஞ்செல்வஞ்
சீவகாருண்ணியராமானுடரோ
மானுடரிச்செகத்தின்மீதே. ௯௭

நல்லாற்றானாடியுயிர்ப்பொருளாதி
யளந்தருளினலந்தேர்நல்லோர்
சொல்லாற்றானுடலோம்பல்குற்றமென
வெணிமரக்குங்கொலைசூழாதே
செல்லாற்றினீர்வடித்துப்பருகியும்வீழ்
பழன்சருகுமுதலதின்றும்
பல்லாற்றானும்முயிர்க்குத்துயர்புகுதா
மேயருளைப்பாலிப்பாரால். ௯௮

அருளாட்சிகூறுமேதயாருயிர்க்கொன்
றானருந்திபுடலேயோம்ப
மருளாட்சிகூறுகின்றமார்க்கம்பொய்ம்
மார்க்கமாமற்றம்மார்க்கந்
தெருளாட்சியுடையாருக்கிசையாது
தேகமேபொருளாப்பேணி
யிருளாட்சிசெயவேண்டிபருளாட்சி
செய்வாய்க்கேயிசையுமன்றே. சுசு

வேறு.

இறையறிவொடிச்சைதொழில்வியாபகமா
வருந்திமுத்தவியல்பாயுள்ளு
மறையுமேல்வியாப்பியசித்துயிர்களறி
விச்சைதொழின்மூன்றுமொட்டி
நிறுவசுதந்திரமிறைக்குண்டுயிர்கள்சுதந்
திரத்தினனிநிலேத்துநாஞ்சொ
லுறுதிவழிசென்றிலவென்றலினவற்கவ்
வியல்பின்மையுண்மையாய்த்தே. சுoo

வேறு.

மானவரென்செய்வர்தீதாகிடவோர்மரம்வைத்தே
மீனமுறும்மயல்வஞ்சனையுள்விட்டிருந்தேமா
லானதுபாவமெமாலவர்த்தண்டமடைவித்த
வீனமெவூறும்மிறையஃதெய்தவிசைந்தானே. சoக

தீவினைநல்வினைசெய்தோரைச்சென்றடையுமா
தேவினதாணையினுகலினவைநுந்தேதத்தள்ளப்
பூவழிமரிபுன்கருவுள்விழுந்துபுலம்புற்று
மாவினைகோலியலைந்திவண்வீயமதித்தானே. ௧0௨

தேவத்துவத்தாற்றீராவாதிச்சென்மநோய்
தேவத்துவமன்மனுடத்துவத்தாற்றீருமோ
தேவத்துவமேமனுடத்துவமாய்த்தீர்க்கும்மேற்
றேவத்துவமேதீர்த்ததென்றுசெப்பையா. ௧0௩

மனுடத்துவமுந்தேவத்துவமுமாறுரு
மனுடத்துவமுந்தேவத்துவமும்மருவும்மோ
மனுடத்துவமுந்தேவத்துவமும்மருவும்மேல்
மனுடத்துவமுந்தேவத்துவமுமற்றொன்றாம். ௧0௪

இருளுமொளியும்போலேயிகலுமிவ்விரு
பொருளுமொன்றொன்றாகாபுந்தியில்லோனே
மருளின்மூழ்கிப்பாவத்தாழ்புன்மனிதனைத்
தெருளின்மனிதனோயோவுங்கோன்றெளிவிப்பான்.

நரனாய்நின்றேநரனையாளவேண்டலிற்
பரனாய்நின்றேனரனாகிடவெண்பரிசென்னின்
வரனேர்தூயவடிவாநரனின்வரல்சாலு
மொருமாதின்புன்கருவின்வருதலொல்லாதே. ௧0௬

நால்வகையோனியுளொன்றிற்பட்டுடைக்குந
மால்கெழுமான்மவருக்கமென்றேவைத்தனர்
சூல்கொள்சராயுவுள்வீழ்ந்துயேசுதோன்றலிற்
பால்வழியிற்சூழ்பசுவேயாவன்பதியாமோ. ௧0௭

வேறு.

சிவருறத்தருதண்டந்தானடையு
முகந்தாணைசெய்துநீதி
பாவமவர்க்கசுற்றலிற்றன்னருளினையு
மன்னவர்க்குப்பாலித்தானந்
தேவனெனமொழிகுவையெச்சிவனையு
மொப்பநோக்குதலேநீதி
கோவவவர்த்தெறலும்வினையொழித்தருடற்
பொருட்டுவமைநுவலுங்கேண்மோ. ௧0௮

நன்னெறியின்வந்தாருக்கருளினான்
மன்சிறப்புநல்குநன்கில்
புன்னெறியின்வந்தார்க்குவேந்தானேன்
றருதண்டம்புரிந்தேயந்தக்
கொன்னெறியின்வரச்செய்துசிறப்பளிக்கு
மெனினிரண்டுமருளின்கோளே
பன்னுமருளின்பருடறன்புறுத்த
னீதியெனல்பழுதென்றேகாண். ௧0௯

வேறு.

நரனெனப்பிறந்துலகளிக்கநச்சிறே
னிருமுதுகுரவரினெய்துமெச்சமாய்
வருமுதற்கரணத்தின்மருவிடானுரு
வொருமுதற்கரணத்தின்மருவுமோக்சமென். ௧௧0

ஆவியினமைந்ததேயன்றியன்னவன்
மாவுருச்சோணிதமயமுமன்றெனிற்
கோவவ்வனவள்கருக்குழியிற்சேர்தலால்
யாவதோபயன்புறத்தெய்திற்கோதெனே. ௧௧௧

களவினிற்கணவனைக்கலந்தகன்னிகை
மழவயிற்றுறமிகவஞ்சிவாய்விடாண்
முழுமுதற்கடவுளின்முளைத்ததென்வயிற்
றெழுமருட்கருவெனச்சொல்லினளரோ. ௧௧௨

பழவினைத்துடக்கறுத்தருளப்பண்ணவன்
குழவியிற்றோன்றுமுன்கோறிறம்புவித்
தழுமியற்குழவிகளனைத்துமாய்த்தனன்
வழியருட்கடலிவனன்றிமற்றியார். ௧௧௩

அரசனிச்சிசுவினையழித்தெமக்கிடர்
தருமிவட்சாரினென்றழுங்குதந்தைதாய்க்
கொருவிடத்துயர்நனியொன்றுஞ்செய்திலன்
பெருமுதற்கடவுளிற்பிறந்தபிள்ளையே. ௧௧௪

சிவமுதற்பொருளெனத்தெருட்டச்சண்பையிற்
றவமறைக்குலத்தவதரித்தபிள்ளையார்
பவமறத்தெருட்டினர்பத்தொடாறினு
ளிவனவத்தழித்ததென்முப்பஃதியாண்டினே. கக௫

இறையருட்பெருமையினிருந்தனன்னெனி
னிறையவற்கன்னியமென்கைபோதரு
மறுதியாங்காலம்பார்த்தமர்ந்தனன்னெனி
னறுதியாங்காலமிங்கடைதலாமரோ. ககசு

அன்றியுஞ்சனனத்தாலாகுந்தீவினை
கொன்றிடவந்தவுங்குருவினுக்கிவ
ணொன்றிடுங்காலமேனுயிர்க்கிரங்கியே
சென்றவன்கொன்னிருந்திடுகைசீரிதோ. ககஎ

மறைவினிற்பலப்பலமாயவித்தைக
டிறமுறப்பயிறலிற்செலுத்தினனல
திறைமகற்கஞ்சியேயிருந்தனன்னெனு
வறையிதற்கிரண்டிலொன்றேதுவாவையா. ககஅ

தனையொழித்தொருநெறிசார்தறீதென்போன்
கனைகடற்பாரொலாங்கலந்துதன்னெறி
யெனைமதத்தோருமேற்றிடச்செயாததெ
னனையவாசெயவலியருளிலன்கொலாம். ககக

அலகைசெய்மயக்கினுளகப்பட்டன்றுயர்
மலையினுங்கானினும்வைகளுற்பது
தொலைவுறுங்காறுமுணின்றித்துன்புறாஉங்
கலதிமானுடன்கடிகடிந்ததெங்ஙனே. கஉ0

வேறு.

அந்நாளிற்சிறந்தவறென்றறையூதர்
பிரதானவாசாரி
மன்னனவேரோதின்வழியினுளார்க்
கேசுவுமைமகிழ்ச்சியாக்கா
தின்னுமைவிளைத்தமைகேட்டனமெவர்க்கு
மினியவாமுறுதிநாடிச்
சொன்னனெனபதும்பல்லோர்கொண்டனரென்
பதும்பொய்யேசூழுங்காலே. கஉக

மன்னவனெங்ஙனமொழுகுமன்னுயிரு
மங்ஙனமேயொழுகிவாழு
மன்னதனுன்மன்னனுணர்ச்சிவநெறியிற்
செலுத்தவேயருட்குமாட்சி
யென்னவெமையாளுடையபிள்ளையார்
திருவுள்ளத்தெண்ணிக்கூடற்
றென்னவனைநீறணிவித்தருளினர்நுங்
குருகிழோர்த்தெருட்டல்வீணே. கஉஉ

வேறு.

பல்லவனெனுமோர்வேந்தன்
றெளிந்துயப்பகர்வாஞ்சர்
கொல்லுநீற்றறையினுய்ந்து
நஞ்சினையமுதாக்கொண்டுஞ்
செல்லுமாவிறைஞ்சுவித்துஞ்
சிலைக்கடற்றலமயாத்திட்ட
கல்லினைமிதப்பித்தும்முற்
சிவனருள்காட்டுமாபோல். ௪௨௩

வேறு.

தேவசுதருறனென்றேதிரிந்தரச
னெறியையிவன்சிதைக்குமீது
பாவமெனவவன்யூதர்பற்றுகின்ற
வமையத்தும்பாராள்வென்றிக்
காவலன்முற்கொணர்போழ்துமவன்மரத்தி
லறைபோழ்துமிறைமைகாணூஉ
வேவருந்தற்றெளிந்துயச்செயாமையனற்
புதச்செயல்கள்யாவும்பொய்யே. ௪௨௪

யாதனையுற்றெம்பொருட்டாலரசினிறந்
திடவெண்ணியொழிந்தானுண்டு
நாதனருள்வலிகாட்டுமுறையையெனி
னக்கருத்தைநயமாவேந்தற்
கோதியவன்றுணியுமாறற்புதங்கள்
சிலகாட்டியுயிரைப்போக்க
னீதியொளித்தோடினதும்பிறவுமவன்
பட்டிமையேநிறுத்துமன்றே. ௪௨௫

மன்னவனின்முடிந்தன்றிமாயாது
வினையென்கைவழக்கோதானே
தன்னுயிராகீப்பினதுசாயாதோ
பயனின்மொழிதானீசூழ்ந்து
பன்னினுங்கேட்பவர்தமக்குத்தோன்றுதோ
வதன்பொய்ம்மைபகரலின்றே
ரன்னவுரையினியரசேயவனையொறுத்
தனனவன்செயடாதநோக்கி. கஉசு

நான்கடவுளென்றுநீதிரிந்ததுமெய்
யோவென்றுநாடுமென்மு
னுன்கடவுளலனென்கைபோதரவிங்
கிவர்நவில்வரென்றான்யேசு
தான்கடவுளென்றுதிரிந்தவன்மரணந்
தனக்கெய்துமென்றேயஞ்சித்
தான்கடவுளென்றுரையான்சாவவிரும்
பினனென்கைதவறுமன்றே. கஉஎ

பன்னிருவரோவரினும்பக்குவநன்
குடையரொமக்கினியர்நாஞ்சொ
னன்னெறியையாண்டுஞ்சென்றுபதேசித்
திடவல்லநல்லோரொன்றே
யுன்னிறைவன்றெரிந்தபினரொருவனறை
போனதுஉமொழிந்தோர்நாங்க
ளன்னவனையறியோமென்றுரைத்ததுஉ
மவன்வஞ்சமளக்குங்கோலாம். கஉஅ

அப்பாவோவென்னையிவண்கைவிட்டனையோ
வென்றன்றேயேசுநொந்து
செப்பாமன்புலம்பியதுசெப்புமவன்
றுயருழுகைசீவான்மாபோற்
குப்பாசவாழ்க்கையிற்றுன்புறுமிவனோ
கடவுள்கொண்டவுருவிற்சேர்ப
விப்பாரினடித்தனனென்றிடிற்றுயர
முற்றிலனென்றிசைத்திபேதாய். கஉகூ

அங்ஙனமாகுகவென்னினீதோல்வித்
தானத்தையடைந்தாயையா
வெங்ஙனமென்றிடிற்கேட்டியிறைதுயரிற்
படுதலானுயிர்கண்முன்ன
ருங்ஙனுஞற்றியவினையினீங்குமென
வுரைத்தநீதுயருறுனென்
றிங்ஙனிசைத்தமைமேற்கோளழிவுமதன்
விடுகையுமாயிழுக்கலாலே. கங0

முன்னைவினைதீர்ந்ததேற்றுயரவனுற்
றனனென்றேமொழிகபேதா
யன்னவனம்போற்றுயரத்தழுந்துமே
லவிகாரியாகானென்றோர்
பன்னுதுயரினையவற்காவவன்கொண்ட
மனுடவுடல்படுமற்றென்னிற்
சொன்னவுடல்சடமதஞற்றுயருறு
தவனுறலேதுணிபாகுமமே. கஙக

யேசுதுயருழந்தானென்றுயிறைமைக்
இழுக்காமென்றிகழ்ந்தேமாகப்
பேசுதுயருழந்திலனென்றுளித்திட்டாய்
பேசுதுயரவனூறுனேன்
மாசுபுரிசென்மவிலேமாறுதென்
றியாமறுப்பாமென்றேயஞ்சிக்
கூசியுடலூறல்பொருளென்றய்சடமற்
றுறுதென்னக்கொடுத்தாய்மோனம். கஙஉ

அல்லதூஉமுடறுயரமடையுமெனி
லடமுசலோருடல்களேயாஞ்
சொல்லு துயருழந்தொழித்தற்கெனவும்போ
மெனவுணர்கசொல்லுமெல்லா
வல்லபமுமுடைப்பரமன்பெருங்கருணைத்
திறத்திறுயிர்வருத்தநீக்கப்
புல்லிமென்றுயர்சிறிதுமற்றதனு
லிறைமைமுட்டுப்பொருந்தாதென்னின்.

எல்லாஞ்செய்திடவல்லவியல்போல
நிராமயமாமியல்புமென்று
மல்காமெய்ப்பூரணவானந்தமா
தியவுமிறைக்குறுதியேகாண்
வல்லாண்மையாலருளாற்றுயர்மருவ
லெவன்சிறிதுமருவுமேனு
நில்லாமேநீங்குமந்தோநிராமயமா
தியகுணங்களவனினின்றே. கஙா

சுத்தராயிருந்தநரர்பாவத்தா
னசுத்தராய்த்துடக்குற்றூர்நங்
கத்தனவர்வினைதீர்க்குங்கழுவாயா
யுதித்திந்தக்கடற்பார்தன்னிற்
செத்தனனென்றிடிற்பழையசுத்தமே
யவர்தம்மைச்சேவணுமீண்டுப்
பெத்தர்போற்கன்மமெனும்பாவமீட்
டுதலெங்ஙன்பேதைநீராய். கஙரு

வேறு.

கருவினுளழிவபல்ல
கழிந்திடாதழிவபல்ல
பரிணமித்தழிவபல்ல
பாலராயழிவபல்ல
வுளதருமிவைகடமை
நன்மைகளுனுற்றுமாறி
னிரயமோவீடோகூடு
நீதெரிந்திறப்பாயையா. கஙசு

முன்வினையேசுவோடே
முடிதவினறம்பாவங்கள்
பின்னிவைசெயாமையாலே
பெறுகுவவீடேயென்னி
லுன்னிறைநரரையெல்லா
மோதுமக்காலத்துள்ளே
கொன்னுறவழித்துவீடு
கொடுத்திடாதிருத்தல்கோதாம். கஙஎ

சேருறுதொழியும்வீடு
    நிரயமுமென்னிற்றேவன்
பாருறவவற்றைத்தோற்றல்
    பயனில்புன்செயலேபோகத்
தேருறுருன்னூலீண்டுச்
    சேர்குவதெங்கேசெத்தா
லோர்வுறுமனத்தினன்மை
    யுறாற்றின்வீடுறுவதொன்னில். ௧௩௮

நானெறிமிகையாமின்னு
    நான்மனவுணர்ச்சியோர்சார்
மானவர்க்களித்துமற்றை
    நரருக்குமனமேயீத
ருனிறைக்கூனமாகுஞ்
    சார்குவர்நிரயமென்னிற்
கோனவர்க்கலிதியாமை
    குற்றமாய்முடியுமையா. ௧௩௯

ஆனமன்னுயிர்கடம்மை
    யணைபந்தப்பகுதிக்கேற்ப
ஞானநாயகனும்வள்ள
    னவிலுலகாயுதாதி
மானமார்சமயமொன்றுக்
    கொன்றுமேம்படவகுத்தே
மேனவில்சமயசோபா
    னம்மேறிமேம்பட்டோர்க்கே. ௧௪௦

உருவுருவருவமேலா
மருவமென்றேது மூன்றின்
பிரிவுகளெவைக்குமேலாய்ப்
பிறங்குதன்சுத்தஞானச்
சொரூபமொடொன்றிவாழத்
தோமிலாச்சமயாதீத
மருளினனென்றுமேலோ
ரறிவுறுத்திடநீபேதாய். கசக

எங்கடேவாமியேசு
யாவர்க்கும்விவிலியஞ்சொ
றுங்கமாநெறியொன்றும்மே
சொற்றனன்மற்றையாவுந்
தங்களாதரவான்மாந்தர்
தாம்படைத்தனுட்டிப்பாரொன்
றிங்கடாதுனைக்கையுங்கோ
னிறைமைக்கஃதிழுக்காமென்றோர். கசஉ

எத்திறமிழுக்கலென்னிற்
றன்னையேயிறைஞ்சத்தோற்றும்
புத்துயிர்த்தொகுதிபல்ல
தீநெறிப்புகாதுகாத்தல்
வைத்ததோர்கடனதாக
மற்றதுசெயாமையுங்கள்
கத்தன்வன்கணன்பேராற்ற
லிலனென்கைகாட்டலேகாண். கசந

பரனருள்சுதனீயென்னிற்
பார்த்திடயாங்களிங்ஙன்
மரணினின்றிறங்கியெம்முன்
வருதியாலென்றேயூத
ருரைசெயவாரான்பின்ன
ரொருவருமறியாவண்ண
மரையிருளெழுந்தானென்ற
லற்புதப்பாலதாமோ.

புன்புலால்யாக்கைதன்னுட்
பொருந்துமிவ்வாழ்வுயிர்க்குத்
துன்பமாக்கிடுமோர்துச்சில்
வாழ்வென்றேதுறப்பர்மேலோ
ருன்பரனுடல்பிரிந்து
மொழிந்திலனதன்பாலாசை
பின்புமக்காயவாழ்வை
விரும்புதல்பிராந்தியன்றே.

மக்கடன்வடிவந்தன்னை
மாபரன்கொண்டதாதி
மக்கடாஞ்செய்தபாவத்
தொடர்ச்சியைமாய்க்கவென்றாய்
தக்கதோயேசுமாய்ந்த
பின்னரச்சரீரஞ்சார்தல்
பொக்கமாமுறையேகொண்டு
பிதற்றுபுல்லறிவினேனே.

மாமடப்புலையராகி
மற்றவற்கெழுமிவாழ்ந்து
காமுறப்பட்டசீடக்
கள்வரோமறைந்துநண்ணிச்
சாமமத்தனுவைவவ்விச்
சகத்தினர்தமைமயக்கத்
தான்மக்குரைத்தவாயே
செழுந்தனனெனறகாதோ. கசஎ

வேறு.

அங்கிருந்தென்யேசுவிங்கேயிருந்திடினன்
பனையளித்தலாகும்வன்டர்
தங்களையுந்தன்னைவிசுவசித்திடுமா
றுபதேசத்தாற்றிருப்பித்
துங்கமுறச்செயலாமச்சுத்தாவி
யாலிவற்றைப்புரியுமென்னி
லுங்குருமுன்னிங்குவரன்மிகையவனு
மாவியுமொன்றெனலொண்ணுதாம். கசஅ

அறம்பாவம்புரிந்திறந்தோர்க்கப்பயனை
யப்பொழுதேதுய்ப்பியாத
குறும்பேதோகோமகனுங்குணங்குற்றஞ்
செய்தோரையுடனேநாடிப்
பெறும்பேறிங்குடனுகர்வித்திடல்காண்டு
நடுச்செயுமுன்பேசுமன்றே
ருறுந்தானமுறும்பயன்களுன்றனூல்
கூறுமையுணர்வாங்கொல்லோ. கசகூ

தூலவுடலழிந்திடினுஞ்சூக்குமவின்
றுடல்பின்னுந்தோன் றுமிந்த
ஞாலமிசைமரம்போயும்வேரின்னின்று
வேறுமரநண்ணுமாபோ
லேனுமிஃதறியாமேயழிந்தவுட
லோடுயிர்களெழுமென்றோதல்
சாலுவதன்றெனவுணர்கசழக்குரைகொண்
டேபிதற்றுந்தகையுளோனே. சுடுo

யேசுபுகனெறிகண்டுமனந்திரும்பாச்
சமயர்முத்தியெய்தாரென்றே
பேசினைநீயந்நெறியைமெய்ந்நெறியென்
றன்றோர்சன்பேணிக்கொள்ள
வாசைதனையவருளத்தேயாக்காத
தீமையவனிடத்தேயாமிந்
நீசநெறியினியொருவிச்சித்தாந்த
சைவமடிநீசேர்ந்துய்யே. சுடுக

யேசுமதசங்கற்பநிராகரணமுற்றிற்று.

---

இந்நூல் பிரமாதிஸ்ரீ மேஷரவியில் திருவாவடுதுறை
ஸ்ரீ-ல-ஸ்ரீ. சுப்பிரமணியதேசிகசுவாமிகள்
மகாசந்நிதியாரங்கேறியது.

☞ நியாயபோதினியெனப்பெயரிய இதனுரை
விரைவில்வெளிப்படும்.

சித்தாந்தசைவ

மாபாடியம்வகுத்தருளிய

சிவஞானசுவாமிகள்திருவடிவாழ்க.

---

பொய்ஞ்ஞானப்படிறர்புகல்பிணக்குரைகள்

புரைபட்டுப்புறம்போய்வீய

உய்ஞ்ஞானசித்தாந்தசைவமொழி

பொருளுண்மையுலகந்தேற

மெய்ஞ்ஞானவளந்தருமெய்ச்சிவஞான

பாடியந்தென்மொழியான்மேலாச்

செய்ஞ்ஞானத்துறைசைவருசிவஞான

முனிவர்பிரான்றிருத்தாள்போற்றி.



PRINTED AT THE SCOTTISH PRESS.